

# உரிச்சொல் நிகண்டு,

## மூலமும் உரையும்.

---

இஃது

இவ்வூரில் வழங்கும் பல ஏட்டுப் பிரதிகளையும்,

சில அச்சுப் பிரதிகளையுங் கொண்டு

ஶ்ரீ. ஶ்ரீ. அருணாசலம் சதாசிவம்பிள்ளை

என்பவரால்

பரிசோதித்துத் திருத்திச் சேர்க்கப்பட்ட

கையெழுத்துப் பிரதிக்கிணங்க

யாழ்ப்பாணம்

மானிப்பாய், அச்சியந்திரசாலையிற் பதிப்பிக்கப்பட்டது.

---

JAFFNA:

RIPLEY AND STRONG—PRINTERS.

1858.



# உரிச்சொல் நிகண்டு.

---

## காப்பு.

### வெண்பா.

சொல்லுந்திவாகரமுஞ் சூடாமணிமுதலா
நல்லோருரைத்தபிற நன்னிகண்டும்—வல்லுனர்கள்
அன்றியிளம்பாலருணராரவர்க்காயிவ்வுரிச்சொல்
இன்றிசைக்க வேகபரன்காப்பு.

# உரிச்சொல் நிகண்டு.

---

## முதலாவது

### தெய்வப்பெயர்த்தொகுதி.

சங்கரன் றாணு சயம்பு திரியம்பகன்
ஐங்கர னைய னழலேந்தி—பைங் கைலை
வெற்பன் விடையன் விமல னுருத்திரன்
நற் பன்னகப் பூணினான். க

காலகாலன் னீலகண்டன் கபாலி திரி
சூலதரன் சடையன் சோமதர—னாலமுண்டோன்
நீறாடி சோதி புரமெரித்தோ னித்த னடன்
ஆறானன் றாதையாம். உ

அரவன் புராரி வரனக்க னாதி
பரமன் பரசுதரன் பித்த—னரனே
கிரியைவளைத்தோன் கிரிசன் கிரீசன்
வரி யுழுவைத் தோலுடுத்தவன். ௩

ஐந்துமுகத்தோ னழலாடி யண்டரெல்லாம்
உய்ந்திட நஞ்சுண்டோ னுருத்திடுந்—தந்தி
உரியன் பினாகி யுமாபதி மாதேவன்
பரவரிய பூதபதி. ௪

# பெயர்ப்பிரிவு.

---

சிவன்பெயர்—சங்கரன், தாணு, சயம்பு, திரியம்பகன், ஐங்கரன், ஐயன், அழலேந்தி, கைலைவெற்பன், விடையன், விமலன், உருத்திரன், பன்னகப்பூணினன். ௧௨

காலகாலன், நீலகண்டன், கபாலி, சூலதரன், சடையன், சோமதரன், ஆலமுண்டோன், நீறுடி, சோதி, புரமெரித்தோன், நித்தன், நடன், *ஆறுனன்தாதை. ௧௩

அரவன், புராரி, வரன், நக்கன், ஆதி, பரமன், பரசுதரன், பித்தன், அரன், கிரியைவளைத்தோன், கிரிசன், கிரீசன், உழுவைத்தோலுடுத்தவன். ௧௩

ஐந்துமுகத்தோன், அழலாடி, நஞ்சுண்டோன், தந்தியுரியன், பிஞ்ஞகி, உமாபதி, மாதேவன், பூதபதி. ௮

---

* ஆறுனன், கந்தன்.

ஈசன் பசுபதி யீசான னெஞ்ஞான்றும்
நாசமிலாதோ னட னம்ப—னுசறுசீர்க்
கங்கைதரித்தோன் கறைக்கண்டன் கண்ணுத
லோன்
இங்கிவையெல்லாஞ் சிவன்பேராம். ரு

ஆரியை யையை யயிராணி யம்பிகை
நாரி பரை யமலை நாயகி—சாரிமய
வல்லி சிவை சாம்பவி மாதா வுருத்திரை
வெல்லும் விமலை யுமை. சு

தாருகற்காய்ந்தாள் பைரவி சாமுண்டி
சூரியமூவிலை வேற்குமரி—பேரெழிலார்
ஆளியூர்சூலி அலகைக்கொடியாள் கங்
காளியிவை காளியின்பேராம். எ

இகன்மயிடற்காய்ந்தா ளேழிற்குமரி நீலி
சுகநிறத்துந்தரி துர்க்கை—பகவதி
வெய்யசயமகள் விந்தை விறற்கொற்றவை
ஐயை யடலாரியையுமாம். அ

அங்குசபாசதர னாகுவாகனன்
ஐங்கரத்தோ னுறுநிகர்மும்மதத்தன்—கங்கைதரு
மைந்த னிருமருப்புமாமுக னல்வாய னேற்றுறைத்
தந்தனுட னேரம்பன்றான். கூ

பால்புரைநீற்றான்மகன் பார்ப்பதிமைந்தன்
மான்மருகன் காமவேண்மைத்துனன்—வேன்மு
ருகன் [வை
முன்னோன் கணபதி மூத்தோன் முக்கண்ணனி
இன்னேவிநாயகன்பேராம். ௧௦

# பெயர்ப்பிரிவு.

ஈசன், பசுபதி, ஈசானன், நாசமிலாதோன், நடன், நம்பன், கங்கைதரித்தோன், கறைக்கண்டன், கண்ணுதலோன். ௯. ஆக, ௫௫

உமைபெயர்—ஆரியை, ஐயை, அயிராணி, அம்பிகை, கௌரி, பரை, அமலை, நாயகி, இமயவல்லி, சிவை, சாம்பவி, மாதா, உருத்திரை, விமலை. ௧௪

காளிபெயர்—நாருகற்காய்ந்தாள், பைரவி, சாமுண்டி, குமரி, சூலி, அலகைக்கொடியாள், கங்காளி. ௭

துர்க்கைபெயர்—மயிடற்காய்ந்தாள், குமரி, நீலி, அந்தரி, பகவதி, சயமகள், விந்தை, கொற்றவை, ஐயை, ஆரியை. ௧௦

விநாயகன்பெயர்—அங்குசபாசதரன், ஆகுவாகனன், ஐங்கரன், மும்மதத்தன், கங்கைமைந்தன், *மாமுகன், நால்வாயன், ஒற்றைத்தந்தன், ஏரம்பன். ௯

நீற்றோன்மகன், பார்ப்பதிமைந்தன், மான்மருகன், காமவேண்மைத்துனன், முருகன்முன்னோன், கணபதி, மூத்தோன், முக்கண்ணன். ௮. ஆக, ௧௭

* மா, யானை.

ஆறிரண்டுதோளா னயிலான் மயிலூர்தி
ஆறுமுகத்தா னமரற்காய்ச்—சீறவுணர்
போர்தடிந்தான் முருகனைக்காய்ந்தான் பொருப்
பெறிந்தான்
சூர்தடிந்தா னீசன்சுதன். கக

முருகன் விசாகன் முருகு செவ்வேண் மாயோன்
மருகன் குகன் குமரன் வானோர்க்-கொருதலைவன்
கங்கைமகன் சேந்தன் கார்த்திகேசன்பொருப்பில்
மங்கைமகன் கந்தன்பேராம். கஉ

நெடியோனன் குறளுருவ னேமியோன் புட்சேர்
கொடியோன் கரியோன் கோவிந்தன்—படியிடந்
தோன்
ஆயன் முராரி யரி கேசவன் கண்ணன்
மாய னுலகழந்தான் மால். கங

தாமரையாள் செய்யாள் கரியவரிதேவி
மாமலரா ளிந்திரை செந்திருவி—ஞைமமாம் [ப்பு
மன்மதனன் மீனுயர்த்தோன் மார னநங்கன் கரு
வின்மதனன் விற்பகழிவேள். கச

காம னிரதிபதி சம்பரசூதனன்
தோமின் மதுசகன் சித்தசன்—பூமகள்
மைந்தன் மகரக்கொடியோன் மனோபவனம்
பைந்துடையோன் கந்தர்ப்பனும். கரு

கேட்டை கேடலணங்கு கேடுள்ளாள் மூதேவி
சேட்டை சிறப்பில்லாள் சீர்கேடி-மூட்டுதேனவை
கர்த்தபத்துவாகனியாள் காகக்கொடிப்பரித்தாள்
அத்தமகட்கே மூத்தாளாம். கசு

கந்தன்பெயர்—ஆறிருதோளான், அயிலான், மயிலூர்தி, ஆறுமுகன், அவுணர்த்தடிந்தான், தாருகற்காய்ந்தான், பொருப்பெறிந்தான், சூர்தடிந்தான், ஈசன்சுதன். க

முருகன், விசாகன், முருகு, செவ்வேள், மாயோன்மருகன், குகன், குமரன், வானோர்தலைவன், கங்கைமகன், சேந்தன், கார்த்திகேசன், மங்கைமகன். கஉ. ஆக, உக

*மாலின்பெயர்—நெடியோன், குறளுருவன், நேமியோன், புட்கொடியோன், கரியோன், கோவிந்தன், படியிடந்தோன், ஆயன், முராரி, அரி, கேசவன், கண்ணன், மாயன், உலகளந்தான். கச

செந்திருபெயர்—தாமரையாள், செய்யாள், அரிதேவி, மலராள், இந்திரை. ரு

மன்மதன்பெயர்—மீனுயர்த்தோன், மாரன், அநங்கன், மதனன், வேள். ரு

காமன், இரதிபதி, சம்பரசூதனன், மதுசகன், சித்தசன், பூமகள்மைந்தன், மகரக்கொடியன், மனோபவன், அம்மைந்தன், கந்தர்ப்பன். கo. ஆக, கரு

மூதேவியின்பெயர்—கேட்டை, கெடலணங்கு, கேடுள்ளாள், சேட்டை, சிறப்பில்லாள், சீர்கேடி, தௌவை, கர்த்தபவாகனி, காகக்கொடியாள், மூத்தாள். கo

---

* மால், விட்டுணு.

பிரமன் பிதாமக னான்முகன் போதன்
இரணியகருப்ப னிறைகூதன்—பரமேட்டி
தாதா விரிஞ்ச னயன் சம்பு சதானந்தன்
வேதா விதாதா விதி. கஎ

நாமகள் பாரதி வாணி கலைமகள்
பூமகன்றேவியாம் பொன்னுலகி—னமஞ்
சுரருலக நாகங் கோ வானஞ் சுவர்க்கம்
விரி துறக்க மேலுலகம் விண். கஅ

மகவான் புரந்தரன் வச்சிரபாணி
இகல் வாசவ னமரர்க்கீசன்—முகிலூர்தி
அந்தரநாத னயிராபதப்பாகன்
இந்திரன் வானோர்க்கிறை. கக

அமுதாசனர் விபுத ராதித்தர் விண்ணோர்
இமையோர் புத்தேளி ரிலேக—ரமரர்
வரர் தானவர்பகைவர் பொன்னுலகில்வாழ்நர்
சுரர் வானவர் சுவர்க்கத்தோர். உ0

தானவர் தண்டா ரவுணர் திதிபுதல்வர்
வானவர் மாற்றலர் வல்லசுரர்—மேனி
கரப்போர் நிருதர் நிசாசரர் கார்வண்ணர்
அரக்கர் பிசிதாசனர். உக

ஆயகுறள் கூளி பாரிடம் பூதம்
பேய் கடி மண்ணை பிசா சலகை—சோகு கணம்
வேதாளங் கூளி யழன் குணபஞ் சவங் குணங்கு
ஓதும் பிரேதம் பிணம். உஉ

நிறைசெல்வன் புட்பகத்தோன் மிக்கநிதியோன்
குறைவிறனன் கூற்றையுதைத்த—விறைவற்
கபேதச்சகாய னட லியக்கர்கோமான்
குபேர னளகையார்கோன். உங

பிரமன்பெயர்—பிதாமகன், நான்முகன், போதன், இரணியகருப்பன், இறை, சூதன், பரமேட்டி, தாதா, விரிஞ்சன், அயன், சம்பு, சதானந்தன், வேதா, விதாதா, விதி. ௧௫

நாமகள்பெயர்—பாரதி, வாணி, கலைமகள், பூமகன்தேவி. ௪

பொன்னுலகின்பெயர்—சுரருலகம், நாகம், நோகா, வானம், சுவர்க்கம், துறக்கம், மேலுலகம், விண். ௮

இந்திரன்பெயர்—மகவான், புரந்தரன், வச்சிரபாணி, வாசவன், அமரர்க்கீசன், முகிலூர்தி, அந்தரநாதன், அயிராபதப்பாகன், வானோர்க்கிறை. ௯

அமரர்பெயர்—அமுதாசனர், விபுதர், ஆதித்தர், விண்ணோர், இமையோர், புத்தேளிர், இலேகர், வரர், தானவர்பகைவர், பொன்னுலகில்வாழ்நர், சுரர், வானவர், சுவர்க்கத்தோர். ௧௩

அசுரர்பெயர்—தானவர், அவுணர், திதிபுதல்வர், வானவர்மாற்றலர். ௪

அரக்கர்பெயர்—மேனிகரப்போர், நிருதர், நிசாசரர், கார்வண்ணர், பிசிதாசனர். ௫

பூதத்தின்பெயர்—குறள், கூளி, பாரிடம். ௩

பேயின்பெயர்—கடி, மண்ணை, பிசாசு, அலகை, சோகு, கணம், வேதாளம், கூளி, ஆழன், குணபம், சவம், குணுங்கு, பிரேதம், பிணம். ௧௪

குபேரன்பெயர்—நிறைசெல்வன், புட்பகத்தோன், நிதியோன், தனன், கூற்றையுதைத்தோன்சகாயன், இயக்கர்கோமான், அளகையார்கோமான். ௭

சமன் மறலி யந்தகன் றண்டதரன் கூற்று
நம னடுவன் காலன் றரும—னியமன்
வலனதிகேள்வன் வருணபகவான்
சலபதி பாசதரன். உச

தீபவதிசிந்து வுததி துனி தடினி
ஆபகை தீர்த்திகை யாறு நதி—பாவந்தீர்
பாகீரதி விமலை கங்கை திரிபதகை
நாகாலயத்தோர் நதி. உரு

வாரி சலஞ் சலிலந் தோயம் வனம் புவனம்
நீரங் கீலாலங் கவந்த நீர்—நாரம்
பய முதகம் பானீய மங் கமலம் பரிணி
அய மமுத மப் பம்பு வாம். உகூ

வார் வருண மேக மலராலமேயளகம்
சீவனிய மம்புதம் புட்கரஞ்—சீவனம்
சம்பரங் காண்டங் கனரசங் கோ வறல்
அம்புனலிறுமங்களாம். உஎ

சாதவேதாவே தபனன் றனஞ்சயன்
சோதி யுதாசனனே தூம—கேது
சுசியே சுவலன் சித்திரபானு
வசு வரி வாயுச்சகன். உஅ

கன ரீ தழலழல் பாவகன் வன்னி
அனல் சிகி யங்கி யெரியா—மநிலங் கால்
ஊதை பவன முயிர்ப் பொலி வங்கூழ் சலனம்
வாதம் வளி மாருதம். உகூ

கந்தவகனே சமீரன் சதாகதி
கந்தவாகன் பிரபஞ்சனுன்—வந்து
பரிசன ஞசுகன் பவமானன் வாயு
அரி மாபலனே காற்றும். ௩௦

இயமன்பெயர்—சமன், மறலி, அந்தகன், தண்டதரன், கூற்று, நமன், நடுவன், காலன், தருமன். ௬
வருணன்பெயர்—நதிகேள்வன், சலபதி, பாசதரன்.
௩

நதியின்பெயர்—தீபவதி, சிந்து, உததி, துனி, தடினி, ஆபகை, நீர்த்திகை, ஆறு. ௮
தேவநதியின்பெயர்—பாகீரதி, விமலை, கங்கை, திரிபதகை. ௪

புனலின்பெயர்—வாரி, சலம், சலிலம், தோயம், வனம், புவனம், நீரம், கீலாலம், கவந்தம், நீர், நாரம், பயம், உதகம், பானீயம், அம், கமலம், பாணி, அயம், அமுதம், அப்பு, அம்பு. ௨௧

வார், வருணம், மேகம், அலர், ஆலம், அளகம், சீவனியம், அம்புதம், புட்கரம், சீவனம், சம்பரம், காண்டம், கனரசம், கோ, அறல். ௧௫. ஆக, ௩௬

எரியின்பெயர்—சாதவேதா, தபனன், தனஞ்சயன், சோதி, உதாசனன், தூமகேது, சுசி, சுவலன், சித்திரபானு, வசு, அரி, வாயுச்சகன். ௧௨

கனல், தீ, தழல், அழல், பாவகன், வன்னி, அனல், சிகி, அங்கி. ௯. ஆக, ௨௧
காற்றின்பெயர்—அநிலம், கால், ஊதை, பவனம், உயிர்ப்பு, ஒலி, வங்கூழ், சலனம், வாதம், வளி, மாருதம்.
௧௧

கந்தவகன், சமீரன், சதாகதி, கந்தவாகன், பிரபஞ்சனன், வந்து, பரிசனன், ஆசுகன், பவமானன், வாயு, அரி, மாபலன். ௧௨. ஆக, ௨௩

ஆகாய மந்தர மீ வான ம்பரம் விசும்பு
மாகம் வெளி மாதிரங் கொண்டன்—மேக முகில்
கார் கனம் விண் கொண்மூ பயோதரஞ் சீமூதம்
வார் புயன் மை மாரி மழை. ௩௧

இரவி தபன னினன் பதங்கன் வெய்யோன்
அருணன் மார்த்தாண்ட னருக்கன்—றரணி
உதய னாதித்தன் றினகரன் பானு
கதிரவன் சூரியனுங் காண். ௩௨

அமுதகதிரோன் விது வம்புலி யாலோன்
குமுதச்சகாயன் குபேர—னிமகரன்
இந்துமதி திங்க ளிரவோ னுடுபதி
சந்திரன் சோமன் சசி. ௩௩

அங்காரகன் சே யழல் வக்கிரன் பௌமன்
தங்கார் குசனே தரைமகன்—பொங்காரல்
செவ்வாய் புதன் புந்தி மேதை நிபுணன் புலவன்
அவ்வாய் கணக்கன் மாலாம். ௩௪

அரசன் பொன் பீதக னந்தணன் மந்திரி
சுரர் குருவாகும் வியாழ—மருவுபுகர்
சுக்கிரன் பார்க்கவன் சுங்கன் கவி வெள்ளி
மைக்காரி மந்தன் சனி. ௩௫

கூறுமருணங் கொறி மறி மேடமிவை
ஏறு விடை மூரி யிடபமாந்—தேறுமியாழ்
தண்டு விழவு சவை யிரட்டை யாமிதுனம்.
நண்டு நள்ளி கர்க்கடகமாம். ௩௬

கோலை யரி யாளி கோடும்புலி சிங்கம் [றை
முலை மடந்தை நாமமொழி கன்னிக்காம்—துலைநி
தூக்கு துலாமாகுஞ் சொல் விரிச்சிகந் தெறுக்கால்
தாக்குஞ் சிலை வில் தனு. ௩௭

ஆகாயத்தின்பெயர்—அந்தரம், மீ, வான், அம்பரம், விசும்பு, மாகம், வெளி, மாதிரம். ௮
மழையின்பெயர்—கொண்டல், மேகம், முகில், கார், கனம், விண், கொண்மூ, பயோதரம், சீமூதம், வார், புயல், மை, மாரி. ௧௩
சூரியன்பெயர்—இரவி, தபனன், இனன், பதங்கன், வெய்யோன், அருணன், மார்த்தாண்டன், அருக்கன், தரணி, உதயன், ஆதித்தன், தினகரன், பானு, கதிரவன். ௧௪
சந்திரன்பெயர்—அமூதகதிரோன், விது, அம்புலி, ஆலோன், குமுதச்சகாயன், குபேரன், இமகரன், இந்து, மதி, திங்கள், இரவோன், உடுபதி, சோமன், சசி. ௧௪
செவ்வாயின்பெயர்—அங்காரகன், சேய், அழல், வக்கிரன், பௌமன், குசன், தரைமகன், ஆரல். ௮
புதன்பெயர்—புந்தி, மேதை, நிபுணன், புலவன், கணக்கன், மால். ௬
வியாழத்தின்பெயர்—அரசன், பொன், பீதகன், அந்தணன், மந்திரி, சுரர்குரு. ௭
வெள்ளியின்பெயர்—புகர், சுக்கிரன், பார்க்கவன், சுங்கன், கவி, வெள்ளி. ௬
சனியின்பெயர்—காரி, மைந்தன். ௨
மேடத்தின்பெயர்—அருணம், கொறி, மறி. ௩
இடபத்தின்பெயர்—ஏறு, விடை, மூரி. ௩
மிதுனத்தின்பெயர்—யாழ், தண்டு, விழவு, சவை, இரட்டை. ௫
கர்க்கடகத்தின்பெயர்—நண்டு, நள்ளி. ௨
சிங்கத்தின்பெயர்—அரி, யாளி, கொடும்புலி. ௩
கன்னியின்பெயர்—பெண்பெயரெல்லாம்.
துலாவின்பெயர்—துலை, நிறை, தூக்கு. ௩
விரிச்சிகத்தின்பெயர்—தெறுக்கால். ௧
தனுவின்பெயர்—சிலை, வில். ௨

வடிமீன் கலை சுறு மானே மகரம்
குடங் கரீரஞ் சாடி கும்பம்—நெடுமயிலை
வன்மீன் சலசர மச்ச மிவை மீனம்
எல்லோரை ராசியிவையாம். ௧௮

தாரகை சோதி தாரை தாராகணம்
ஏரோளிசுக்கை யுடு விண்மீனின்—பேராம்
இசைபுல மாதிரங் கோ காட்டை யரிதம்
திசை ககுப மாசையாந் திக்கு. ௧௯

எல்லு திவசந் தினந் திவாவாம் பகல்
எல்லி விபாவரி யாமினி—யல்லே
இரசனி கங்கு னிசா நிசி நத்தம்
இரவின்பேராகுமிவை. ௨௰

வேடி யசனி செல்லு விண்ணே றுருமு
இடியின்பேர் மின்ன லிலங்கல்—கடிய
சஞ்சலஞ் சம்பை சபலை கனருசி
மிஞ்சுதடித்து மிவைமின். ௨௧

*முதலாவது தெய்வப்பெயர்த்தொகுதி முற்றும்.*

---

## இரண்டாவது.

### *மக்கட்பெயர்த்தொகுதி.*

ஐயர் துறந்தோ ரருந்தவர் பற்றற்றோர்
பொய்யிகந்தோ ரைந்துபுலன்வென்றோர்—மெய்யர்
கனிமூலசாகாசனர் கோபங்காய்ந்தோர்
முனிவ ரறவோர் மொழி. ௧

மகரத்தின்பெயர்—மீன், கலை, சுறு, மான். ௪
கும்பத்தின்பெயர்—குடம், கரீரம், சாடி. ௩
மீனத்தின்பெயர்—மயில், வன்மீன், சலசரம், மச்சம். ௪
இராசியின்பெயர்—எல், ஓரை. ௨

விண்மீனின்பெயர்—தாரகை, சோதி, தாரை, தாராகணம், ஒளி, சுக்கை, உடு. ௭
திக்கின்பெயர்—புலம், மாதிரம், கோ, காட்டை, அரிதம், திசை, ககுபம், ஆசை. ௮

தினத்தின்பெயர்—எல், திவசம். ௨
பகலின்பெயர்—திவா. ௧
இரவின்பெயர்—எல்லி, விபாவரி, யாமினி, அல், இரசனி, கங்குல், நிசா, நிசி, நத்தம். ௯

இடியினபெயர்—வெடி, அசனி, செல், விண்ணேறு, உருமு. ௫
மின்னின்பெயர்—மின்னல், இலங்கல், சஞ்சலம், சம்பை, சபலை, கனருசி, தடித்து. ௭

---

# பெயர்ப்பிரிவு.

## மக்கட்பெயர்த்தொகுதி.

முனிவர்பெயர்—ஐயர், துறந்தோர், அருந்தவர், பற்றற்றோர், பொய்யிகந்தோர், ஐந்துபுலன்வென்றோர், மெய்யர், கனிமூலசாகாசனர், கோபங்காய்ந்தோர், அறவோர். ௧௦

௰௬ உ வது. மக்கட்பெயர்த்தொகுதி.

மறையவர் வேதியர் வையகத்தேவர்
அறுதொழிலோ ரந்தணர் பார்ப்பா—ரிறைவன்
நரபதி கொற்றவன் வேந்த னரசன்
புரவலன் கோ பூபதி. உ

ஒத்தபொருள்செய்வோ ரயனுருவில்வந்தோர்
முத்தொழிலோர் மெய்தனத்தோர் வைசியர்--மெ
த்தும்
எழின்மலரோன்பாதத்தில்வந்தோ ரிசையோர்த்
தொழிலுடையோர் சூத்திரரேயாம். ௩

நரர் மனிதர் மானிடர் மானவர் மாக்கள்
புருடரே யாடவ ராடூஉ—வரிவைபிணு
அங்கனை நாரி மகடூஉ வனிதை மகள்
மங்கை மடந்தை பெண்பேர். ௪

ஆரியர் நல்லோ ரறிவுடையோர் பண்டிதர்
சீரியர் சான்றோர் பெரியோர்பேர்—பூரியர்
புல்லர் கலரசடர் நீசர றிவில்லார்
கல்லார் கயவர் கீழோர். ரு

குறவர் சவரர் புளினர் கிராதர்
மறவ ரெயினர் விராதர்—விறல் வேடர்
கானவ ரண்டர் பொதுவரே கோபாலர்
ஆனிடைய ராயர் பெயராம். சு

சவை தொகுதி சங்கங் கணஞ் சமவாயம்
அவை சமுதாயங் கதம்ப—நிவகமே
கோட்டி நிகாயஞ் சயஞ் சஞ்சயஞ் சமுகங்
கூட்டந் திரள் குழுவாய்க்கொள். எ

பார்ப்பார்பெயர்—மறையவர், வேதியர், வையகத்தேவர், *அறுதொழிலோர், அந்தணர். ௫
அரசன்பெயர்—இறைவன், நரபதி, கொற்றவன், வேந்தன், புரவலன், கோ, பூபதி. ௭

வைசியர்பெயர்—பொருள்செய்வோர், அயனூருவில்வந்தோர், முத்தொழிலோர். தனத்தோர். ௪
சூத்திரர்பெயர்—†மலரோன் பாதத்தில்வந்தோர், ஏர்த்தொழிலுடையோர். ௨

மனிதர்பெயர்—நரர், மானிடர், மானவர், மாக்கள். ௪
புருடர்பெயர்—ஆடவர், ஆடூஉ. ௨
பெண்பெயர்—அரிவை, பிணா, அங்கனை, நாரி, மகடூஉ, வனிதை, மகள், மங்கை, மடந்தை. ௯

பெரியோர்பெயர்—ஆரியர், நல்லோர், அறிவுடையோர், பண்டிதர், சீரியர், சான்றோர். ௬
கீழோர்பெயர்—பூரியர், புல்லர், கலர், அசடர், நீசர், அறிவில்லார், கல்லார், கயவர். ௮

வேடர்பெயர்—குறவர், சவரர், புளினர், கிராதர், மறவர், எயினர், விராதர். ௭
ஆயர்பெயர்—கானவர், அண்டர், பொதுவர், கோபாலர், இடையர். ௫

குழுவின்பெயர்—சவை, தொகுதி, சங்கம், கணம், சமவாயம், அவை, சமுதாயம், கதம்பம், நிவகம், கோட்டி, நிகாயம், சயம், சஞ்சயம், சமுகம், கூட்டம், திரள். ௧௬

---

* அறுதொழில், ஓதல், ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்தல், ஈதல், ஏற்றல்.
† மலரோன், பிரமன்.

## உவது. மக்கட்பெயர்த்தொகுதி.

வீரர் மறவர் வயவர் மிகுமள்ளர்
தீர ரபயர் செருத்தொழிலோர்—சூரர்
பொருந ரயிலுழவர் போகாவிறலோர்
செருநரே மீளியெனச்செப்பு. ௮

அமர் ஞாட் பிகன் மலைத லாகவம் பூசல்
சம ரெதிர்த்தல் சங்கரந் தாக்கல்—சமிதி
செரு வெஞ்சமஞ் சங்கிராமந் திற லார்ப்பு
இரணஞ் சமீரம் போராம். ௯

துன்னார் தெவ்வ ரடங்காதார் மாற்றலர்
இன்னாதார் கூடா ரிகலினா—ரொன்னார்
செற்றா ரமித்திரர் சேரார் நள்ளார் செறுநர்
பற்றார் பரர் பகைவராம். ௧௦

குடும்பந் துணை நட்பு கூளி கேள் சுற்றம்
கடும்பு தமர் மித்திரர் நட்டா—ரடைந்தவர்
பற்றுயர் பந்தம் விருந்தந் தொட ரொக்கல்
உற்றார் கிளைஞ் ருறவு. ௧௧

தாதை பிதா வைய னப்ப னத்தன் றந்தை
ஏதமி லன்னை யீன்றாள் பயந்தாள்—மாதா தாய்
சந்ததி தோன்ற றனையன் சேய் புத்திரன்
மைந்தன் புதல்வன் மகன். ௧௨

கணவன் பதி காந்தன் காதல னண்பன்
துணைவன் தலைவன் கொழுநன்—மணவாளன்
தற்பாரியை துணைவி தார மில்லாண் மனைவி
சொற்றேவி காதலியாய்ச்சொல். ௧௩

பேடி கிலீப மலி சண்டன் பெண்டகன்
நீடுகுறள் வாமனமாகும்—கோடிய
கூனின்பேராகு முடமுடங்கல் கொள்கையிலா
ஊன்பிண்டமில்லவுறுப்பு. ௧௪

வீரர்பெயர்—மறவர், வயவர், மள்ளர், தீரர், அபயர், செருத்தொழிலோர், சூரர், பொருநர், அயிலுழவர், விறலோர், செருநர், மீளி. ௧௨

போரின்பெயர்—அமர், ஞாட்பு, இகல், மலைதல், ஆகவம், பூசல், சமர், எதிர்த்தல், சங்கரம், தாக்கல், சமிதி, செரு, வெஞ்சமம், சங்கிராமம், திறல், ஆர்ப்பு, இரணம், சமீரம். ௧௮

பகைவர்பெயர்—துன்னுதார், தெவ்வர், அடங்காதார், மாற்றலர், இன்னாதார், கூடார், இகலினர், ஒன்னார், செற்றார், அமித்திரர், சேரார், நள்ளார், செறுநர், பற்றார், பரர். ௧௫

உறவின்பெயர்—குடும்பம், துணை, நட்பு, கூளி, கேள், சுற்றம், கடும்பு, தமர், மித்திரர், நட்டார், அடைந்தவர், பற்றாயர், பந்தம், விருந்தம், தொடர்பு, ஒக்கல், உற்றார், கிளைஞர். ௰௮

பிதாவின்பெயர்—தாதை, ஐயன், அப்பன், அத்தன், தந்தை. ௫

தாயின்பெயர்—அன்னை, ஈன்றாள், பயந்தாள், மாதா. ௪

மகன்பெயர்—சந்ததி, தோன்றல், தனையன், சேய், புத்திரன், மைந்தன், புதல்வன். ௭

கணவன்பெயர்—பதி, காந்தன், காதலன், நண்பன், துணைவன், தலைவன், கொழுநன், மணவாளன். ௮

மனைவியின்பெயர்—பாரியை, துணைவி, தாரம், இல்லாள், தேவி, காதலி. ௬

பேடியின்பெயர்—கிலீபம், அலி, சண்டன், பெண்டகன். ௪

குறளின்பெயர்—வாமனம். ௧

கூனின்பெயர்—முடம், முடங்கல். ௨

பிண்டமில்லாவுறுப்பின் பெயர்—ஊனன். ௧

புரங் கடம் விக்கிரகம் புற்கலங் தேகம்
குரம்பை யுடன் மேனி பிண்ட—நிரம்புருவம்
மூர்த்தங் களேபரம் யாக்கை தனு வங்கம்
காத்திர மெய் காய முடம்பாம். கரு

வந்துபோமாவி பிராண னுயிர் சீவன்
சிந்தை மன நெஞ்சு சித்த முளம்—புந்தியாம்
போற்று முணர் வறிவு ஞானம் பொறி போதம்
தேற்றந் துணிவு தெளிவு. கசு

சிர முத்தமாங்கங் கஞ் சென்னி தலையாம்
வேரின் முதுகு தாடி யணல் கீழ்வாய்—புரிகுழற்
தேமொழியார் தேமல் பொறி திதலை துத்தி சுணங்
காமென்றுரைப்பரறிந்தோர். கஎ

பங்கி நவிர் குஞ்சி யோரி யுளை பித்தை
இங்கிவையாமாண்மயிர் பெண்மயிர்—கோங்கார்
குரலோம்பால் கூந்தல் குழல் கூழை யோதி
சுரு ளளகங் குந்தளமாய்ச்சொல். கஅ

நாக்கு நா தாலு நகை முறுவல் பல் லெயிறு
மூக்கின்பேர் நாசி துண்டமாம்—நோக்கம்
நயனம் விழி நாட்ட நேத்திரங் கோ கண்ணின்
பெயர் நுத னெற்றியின்பேர் ககூ

வயி றுதர முந்தி நாபியாங் கொப்பூழ்
குய முலை யம்மந் தனங் கொங்கை—பயோதரம்
மொய்கதிர்ப்பூணுக மகலை முரமார்பு
கை புயந் தோ ளத்தங் கரம். உ0

உடம்பின்பெயர்—புரம், கடம், விக்கிரகம், புற்கலம், தேகம், குரம்பை, உடல், மேனி, பிண்டம், உருவம், மூர்த்தம், களேபரம், யாக்கை, தனு, அங்கம், காத்திரம், மெய், காயம். ௧௮

சீவனின்பெயர்—ஆவி, பிராணன், உயிர். ௩
மனதின்பெயர்—சிந்தை, நெஞ்சு, சித்தம், உளம். ௪
அறிவின்பெயர்—புந்தி, உணர்வு, ஞானம், பொறி, போதம். ௫
தெளிவின்பெயர்—தேற்றம், துணிவு. ௨

தலையின்பெயர்—சிரம், உத்தமாங்கம், கம், சென்னி. ௪
முதுகின்பெயர்—வெரின். ௧
தாடியின்பெயர்—அணல், கீழ்வாய். ௨
தேமலின்பெயர்—பொறி, திதலை, துத்தி, சுணங்கு. ௪

ஆண்மயிரின்பேயர்—பங்கி, நவிர், குஞ்சி, ஓரி, உளை, பித்தை. ௬
பெண்மயிரின்பெயர்—குரல், ஐம்பால், கூந்தல், குழல், கூழை, ஓதி, சுருள், அளகம், குந்தளம். ௯

நாக்கின்பெயர்—நா, தாலு. ௨
பல்லின்பெயர்—நகை, முறுவல், எயிறு. ௩
மூக்கின்பெயர்—நாசி, துண்டம். ௨
கண்ணின்பெயர்—நோக்கம், நயனம், விழி, காட்டம், நேத்திரம், கோ. ௬
நெற்றியின்பெயர்—நுதல். ௧

வயிற்றின்பெயர்—உதரம். ௧
கொப்பூழின்பெயர்—உந்தி, நாபி. ௨
முலையின்பெயர்—குயம், அம்மம், தனம், கொங்கை, பயோதரம். ௫
மார்பின்பெயர்—ஆகம், அகலம், உரம். ௩
கையின்பெயர்—புயம், தோள், அத்தம், கரம். ௪

விர லங்குலியா முகிர் நகமாகும்
சிரதரங் கண்டங் கழுத்து—கிரீவங்
களமாஞ் செவி கன்னங் காதா மிதழென்
றுளதா முதட்டின்பேயர். ௨௧

சரணம் பதம் பாதந் தாண் முழந்தாள் சானு •
திரளுங் குறங்கு கவா னூரு தொடை—யரை நிதம்
பம் •
அல்கு னடுவு நுசுப்பு மருங்கிவை
ஒல்குமிடைக்கோத்தபேயர். ௨௨

*இரண்டாவது மக்கட்பெயர்த்தொகுதி முற்றும்.*

• இருதொகுதிக்குங் கூடினவெண்பா, ௬௩.

---

## மூன்றாவது.

### *விலங்கின்பெயர்த்தொகுதி.*

முடங்குளை கோளரி கேசரி சிங்கம்
அடுந்திறற் சீய மரிமா மடங்கலே
பஞ்சானன மரி கண்டீரவம் வயப்போத்
தஞ்சாநகாயுதமேயாம். • ௧

வெருவில் வியாக்கிரந் திவ்வியஞ் சார்த்தூலம்
வரியுழுவை வேங்கை வயமா—மிருகாரி
திண்டிறல் வல்லியஞ் சித்திரகாயந் தரக்கு
புண்டரிகமேன்பர் புலி. ௨

தும்பி கயம் யானை கறையடி குஞ்சரந் தோல்
உம்ப லிபம் வேழங் கரி யத்தி—வெம்பகடு
போதகம் வாரணந் தந்தி யுவா களிறு
மாதங்க நாகங் கைம்மா. ௩

விரலின்பெயர்—அங்குலி. க
நகத்தின்பெயர்—உகிர். க
கழுத்தின்பெயர்—சிரதரம், கண்டம், கிரீவம். ௩
செவியின்பெயர்—கன்னம், காது. உ
உதட்டின்பெயர்—இதழ். க
தாளின்பெயர்—சரணம், பதம், பாதம். ௩
முழந்தாளின்பெயர்—சானு. க
தொடையின்பெயர்—குறங்கு, கவான், ஊரு. ௩
அரையின்பெயர்—நிதம்பம், அல்குல். உ
இடையின்பெயர்—நடு, நுசுப்பு, மருங்கு. ௩

---

# பெயர்ப்பிரிவு.

## விலங்கின்பெயர்த்தொகுதி.

சிங்கத்தின்பெயர்—முடங்குளை, கோளரி, கேசரி, சீயம், அரிமா, மடங்கல், பஞ்சானனம், அரி, கண்டீரவம், வயப்போத்தி, நகாயுதம். கக

புலியின்பெயர்—வியாக்கிரம், திவ்வியம், சார்த்தூலம், வரி, உழுவை, வேங்கை, வயமா, மிருகாரி, வல்லியம், சித்திரகாயம், தரக்கு, புண்டரீகம். கஉ

யானையின்பெயர்—தும்பி, கயம், கறையடி, குஞ்சரம், தோல், உம்பல், இபம், வேழம், கரி, அத்தி, பகடு, போதகம், வாரணம், தந்தி, உவா, களிறு, மாதங்கம், நாகம், கைம்மா. கஅ.

குரகதம் வாசி குதிரை யிவுளி
துரகம் புரவி துரங்கம்—பரி யரி
கோடகம் வற்கச் சயிந்தவங் கந்திருவம்
ஆடல்வயமா வயம். ௪

கருமாவே கேழ லேறுழி கோலஞ் சு
கர மேனங் கோணி வராகங்—குரோட்ட மரி
போத்திரி பூதாரங் கிருட்டி கிரி கிடி
போர்த்ரும் பன்றியின்பேர். ௫

பிலவங்க நாக கிரந்தரங் கீசகம்
வலிமுகஞ் சாகாமிருகங்—கோலை கடுவன்
வானர மர்க்கட மந்தி குரங் கரி
கானவன் யூகங் கவி. ௬

கரியகுரங் கியூக முசு கோலாங்கூலம்
கரமோடு வாலேபங் கழுதை—கரபம்
இரவணந் தாசோக மோட்டகமா மோட்டை
உரமிகு கோதா வுடும்பு. ௭

வெண்பல்ல வல்லூகம் வேக வுளிய மெலு
திண்பல்லஞ் செங்கட்கருங்கரடி—யெண்கு
கவை நெடுங்கோட்டுக் கலை புல்வாய் நவ்வி
இவையா மிரலையின்பேர். ௮

அருணமுழை சாரங்க மேணங் குரங்கம்
மிருக மறி மா னிகலன்—சிருகாலன்
கோமாயு சம்புகம் பூரி குரோட்ட நரி
ஆமாவின்பேர் கவையமாம். ௯

தேனுவும் பெற்றமுங் கோவுஞ் சேழும்பசுவும்
ஆனுஞ் சுரபியு மாவாகு—மானே
றிடபம் விடை எருது கோபதி புல்லம்
திட மூரி புங்கவஞ் சே. ௰

குதிரையின்பெயர்—குரகதம், வாசி, குதிரை, இவுளி, துரகம், புரவி, துரங்கம், பரி, அரி, கோடகம், சயிந்தவம், கந்திருவம், வயம், மா, அயம். ௧௫

பன்றியின்பெயர்—கருமா, கேழல், ஏறுழி, கோலம், சூகரம், ஏனம், கோணி, வசாகம், புரோட்டம், அரி, போத்திரி, பூதாரம், கிருட்டி, கிரி, கிடி. ௧௫

குரங்கின்பெயர்—பிலவங்கம், நாகம், நிரந்தரம், கீசகம், வலிமுகம், சாகாமிருகம், கடுவன், வானரம், மர்க்கடம், மந்தி, அரி, கானவன், யூகம், கவி. ௧௪

கரியகுரங்கின்பெயர்—யூகம். ௧
முசுவின்பெயர்—கோலாங்கூலம். ௧
கழுதையின்பெயர்—கரம், வாலேயம், கரபம். ௩
ஒட்டகத்தின்பெயர்-இரவணம், தாசேரகம், ஒட்டை. ௩
உடும்பின்பெயர்—கோதா. ௧

கீரடியின்பெயர்—வல்லூகம், உளியம், எலு, பல்லம், எண்கு. ௫
இரலையின்பெயர்—கலை, புல்வாய், நவ்வி. ௩

மானின்பெயர்—அருணம், உழை, சாரங்கம், எணம், குரங்கம், மிருகம், மறி. ௭
நரியின்பெயர்—இகலன், சிருகாலன், கோமாயு, சம்புகம், பூரி, குரோட்டம். ௬
ஆமாவின்பெயர்—கவையம். ௧

ஆவின்பெயர்-தேனு, பெற்றம், கோ, பசு, ஆன், சுரபி. ௬
எருதின்பெயர்—ஆனேறு, இடபம், விடை, கோபதி, புல்லம், மூரி, புங்கவம், சே. ௮

## உ௯ ௩ வது. விலங்கின்பெயர்த்தொகுதி.

கருதுமிராசமாநாகங் கருவழலை
திரனி னகுலங் கீரி தீர்வை—மருவுமுறை
காலோலமேயண்டங் காக்கை நிலாமுகி
பாலார் சகோரமெனப்பார். கக

சில்லிகை சில்லை நெடில் சிமிலி சிள்வீடு
ஒல்லிய காடை குறும்பூழே—சொல்லிடில்
உன்னங் கிராமமா முற்குரோசத்திஞெடு
கின்னர நீர்ப்பட்சியெனக்கேள். கஉ

கோம்பிசரடங் காமரூபி கொடுமுசலி
பாம்பஞ்சுந்தோகைப்பகையோந்தி-காம்பெயராம்
வேகவேலிகருப்பை வெவ்விரும்பன் மூடிகநல்
ஆகுவெளிலணிலேயாம். க௩

கருமயிடங் கவரி கார் மேதி காரா
எருமையின்பேராகு மென்பர்—துருவை மை
ஆகுங்கொறி செம்மறியாடு தள் செச்சை
சாகளம் சாகம் வெள்ளாடு. கச

தக்கவயமுஞ் சசமு முயல்சுணங்கன்
குக்கனெகின் சாரமேயன் சுனகன்—மிக்கசுவா
கோளிரைதேரு மெகினங் கொடுமுடுவல்
ஞாளி ஞமலி யிவைநாய். கரு

வெஞ்சினக் காத்திரவேயம் விடதரம்
கஞ்சுகி காகோதர மிரும்பை—நஞ்சுமிழ்
கூடபதஞ் சக்கிரி கும்பீநச மரி
ஆடும்பவஞ்சனம். கசு

நாகம் புயங்கம் பணி கட்செவி தந்த
சூக மகி மாசுணஞ் சர்ப்பம்—போகி
உரகமே சிம்மதம் பன்னகம் பாந்தள்
அரவு வியாளம் பாம்பாம். கஎ

கருவழலையின்பெயர்—இராசமாநாகம். க
கீரியின்பெயர்—நகுலம், தீர்வை. உ
அண்டங்காக்கையின்பெயர்—காலோலம். க
நிலாமுகியின்பெயர்—சகோரம். க

சிள்வீட்டின்பெயர்—சில்லிகை, சில்லை, நெடில், சிமிலி. ச
காடையின்பெயர்—குறும்பூழ். க
நீர்ப்பட்சியின்பெயர்—உன்னம், கிராமம், உற்குரோசம், கின்னரம். ச

ஓந்தியின்பெயர்—கோம்பி, சரடம், காமரூபி, முசலி, தோகைப்பகை. ரு
கருப்பைஎலியின்பெயர்—இரும்பன். க
ஆகுவின்பெயர்—மூடிகம். க
அணிலின்பெயர்—வெளில். க

எருமையின்பெயர்—மயிடம், கவரி, மேதி, காரா. ச
செம்மறியாட்டின்பெயர்—துருவை, மை, கொறி. ௩
வெள்ளாட்டின்பெயர்—உதள், செச்சை, சாகளம், சாகம். ச

முயலின்பெயர்—அயம், அசம். உ
நாயின்பெயர்—சுணங்கன், குக்கன், எகின், சாரமேயன், சுனகன், சுவா, எகினம், முடுவல், ஞாளி, ஞமலி. க0

பாம்பின்பெயர்—காத்திரவேயம், விடதரம், கஞ்சுகி, காகோதரம், இரும்பை, கூடபதம், சக்கிரி, கும்பீநசம், அரி, பவனாசனம். க0

நாகம், புயங்கம், பணி, கட்செவி, தந்தசூகம், அகி, மாசுணம், சர்ப்பம், போகி, உரகம், சிம்மதம், பன்னகம், பாந்தள், அரவு, வியாளம். கரு

கோலமராளங் கவைநாகூறி லதன்பாலாம்
ஆலமுடன் கரளங் காரியே--நீலம்
விடங் கடு வெங்காளங் கர நஞ்சின்பேராம்
படம் பைவிரிந்த பணம். கஅ

ஆவிதங் கானக்குதிரை மரையாகும்
தாவுமெய்யே முண்மாசல்லியம்---மேவிய
மீன்கவர் மார்ச்சாரம் வெருகு விலாளம்பூனை
வான்கவரி மாச்சவரியாம். கசு

ககபதி நாகாசனனே கலுழன்
இகல்வயின்தேயன் கருடன்--சிகியே
மயில் மஞ்ஞை தோகை மயூரங் கலாபி
குயிலாம் பிகங் கோரிலம். உ௦

வரி யளி தேன் மா மதுகரந் தும்பி
அரி யறுகால் ஞிமிறு கழுது---பிரமரங்
கள்ளுண் சாரங்கஞ் சுரும்பிவை வண்டா மரி
கிள்ளை சுகந் தத்தை கிளி. உக

சிறையஞ்சம் வக்ராங்கஞ் சீர்விகங்கநீரில்
உறையெகின மோதிம மன்னம்---புறவு
திருந்தும் பாராவதந் தீதில் கபோதம்
பருந்துசேனங் கங்கம் பாறு. உஉ

சக்கரவாகங் கோகஞ் சக்கர் நேமிப்புள்
தக்கச்சடம் புலிங்க மூர்க்குருவி—குக்கிலாம்
செம்போத்து வெண்குருகு சாரசம் புட்கரம்
அம்பூவை சாரிகையேயாம். உ௩

குக்குடம் வாரணங் கோழி சரணாயுதம்
கோக்கு பலாகம் புதா போதா—பொற்கண்
இருடி கூன் பிங்கலை கின்னர மாந்தை
கரடங் கோடி காக்கையாம். உச

கோலம், மராளம், கனைநா. ௩. ஆச, உஅ

நஞ்சின்பெயர்—ஆலம், கரளம், காரி, நீலம், விடம், கடு, காளம், கரம். ௮

படத்தின்பெயர்—பை, பணம். ௨

மரையின்பெயர்—கானக்குதிரை. ௧

மூஞ்சூறுவின்பெயர்—எய், சல்லியம். ௨

பூனையின்பெயர்—மார்ச்சாரம், வெருகு, விலாளம். ௩

கவரிமாவின்பெயர்—சவரி. ௧

கருடன்பெயர்—ககபதி, நாகாசனன், கலுழன், வயினதேயன். ௪

மயிலின்பெயர்—சிகி, மஞ்ஞை, தோகை, மயூரம், கலாபி. ௫

குயிலின்பெயர்—பிகம், கோகிலம். ௨

வண்டின்பெயர்—வரி, அளி, தேன், மா, மதுகரம், தும்பி, அரி, அறுகால், ஞிமிறு, கழுது, பிரமரம், கள்ளுண், சாரங்கம், சுரும்பு ௧௪

கிளியின்பெயர்—அரி, கிள்ளை, சுகம், தத்தை. ௪

அன்னத்தின்பெயர்—அஞ்சம், வக்ராங்கம், விகங்கம், எகினம், ஓதிமம். ௫

புறவின்பெயர்—பாராவதம், கபோதம். ௨

பருந்தின்பெயர்—சேனம், கங்கம், பாறு. ௩

சக்கரவாகத்தின்பெயர்—கோகம், சக்கரம், நேமிப்புள். ௩

ஊர்க்குருவியின்பெயர்—சகடம், புலிங்கம். ௨

செம்போத்தின்பெயர்—குக்கில். ௧

வெண்குருகின்பெயர்—சாரசம், புட்கரம். ௨

பூவையின்பெயர்—சாரிகை. ௧

கோழியின்பெயர்—குக்குடம், வாரணம், சரணாயுதம். ௩

கொக்கின்பெயர்—பலாகம், புதா, போதா. ௩

ஆந்தையின்பெயர்—இருடி, கூன், பிங்கலை, கின்னரம். ௪

சாக்கையின்பெயர்—கரடம், செருடி. ௨

மச்சஞ் சகுலி சலசரமீனாகும்
கச்சப மாமை கராமுதலை—நெய்த்த
களவ னளிர் நண்டு கர்க்கடக நள்ளி
தெளியுங்கறையான் சிதல். உரு

*மூன்றாவது விலங்கின்பெயர்த்தொகுதி முற்றும்.*

*மூன்றுதொகுதிக்குங் கூடியவெண்பா, அஅ.*

---

## நாலாவது.

### *மரப்பெயர்த்தொகுதி.*

தரு விடபி பாதவம் பூருகஞ் சாதி
துரும மகமந் தாரு சால---மரமாம்
எழிலிலந்தைகோற்கொடியின் கனிதான் கோலம்
கொழுமலர் வல்லிகொடி. க

வண்டமர்சோலைமலர்ப் பொழி லாராமம்
கொண்டன்மலி கா தருக்குழாந்—தண்டலை
கானங் ககனம் வன மடவி காந்தாரம்
கானக மாரணியங் காடு. உ

தல மடை பன்னம் பலாசஞ் சதனம்
இலை சதம் பத்திரமென்பர்---கலிகை
முகிழ் சாலக நனை கோரகை பூமொட்டு
முகிழ மரும்பு முகை. ந

கந்தங் கிழங்கு மூலந் தூர் சடை சிவை வேர்
கொந்தலர்பூங்கொம்பு பூனை கவடு—ந்திபங்கோல்
பொங்கர்சினைசாய்கை கோப்புமுறி பல்லவம்
அங்கிசலை யந்தளிர்ப்பேர். ச

மீனின்பெயர்—மச்சம், சகுலி, சலசரம். ௩
ஆமையின்பெயர்—கச்சபம். ௧
முதலையின்பெயர்—கரா. ௧
நண்டின்பெயர்—கள்வன், களிர், கர்க்கடகம், நள்ளி. ௪
கறையானின்பெயர்—சிதல். ௧

---

# பெயர்ப்பிரிவு.

## மரப்பெயர்த் தொகுதி.

மரத்தின்பெயர்—தரு, விடபி, பாதவம், பூருகம், சாதி, துருமம், அகமம், தாரு, சாலம். ௯
இலந்தையின்பெயர்—கோற்கொடி. ௧
இலந்தைக்கனி—கோலம். ௧
கொடியின்பெயர்—வல்லி. ௧

சோலையின்பெயர்—பொழில், ஆராமம், கா, தருக்குழாம், தண்டலை. ௫
காட்டின்பெயர்—கானம், ககனம், வனம், அடவி, காந்தாரம், கானகம், ஆரணியம். ௭

இலையின்பெயர்—தலம், அடை, பன்னம், பலாசம், சதனம், சதம், பத்திரம். ௭
முகையின்பெயர்—கலிகை, முகிழ், சாலகம், நனை, கோரகை, மொட்டு, முகிழம், அரும்பு. ௮

கிழங்கின்பெயர்—கந்தம். ௧
வேரின்பெயர்—மூலம், தூர், சடை, சிவை. ௪
கொப்பின்பெயர்—கொம்பு, பனை, கவடு, இபம், கோல், பொங்கர், சினை, சாகை. ௮
தளிரின்பெயர்—முறி, பல்லவம், கிசலயம். ௩

மணமலிபூவே மலர்போதலராம்
துணர் மஞ்சரி கொத்து தொத்தோ--டிணரே
நலஞ்சேரும்வல்லரியுமாகுங்குலை தாறு
பலங் காய் கனியாம் பழம். ௫

கதிரங் குரலாங் கனிமேவியதோல் [மாம்
சேதிளாகுங் காழ் கொட்டை செப்பில்--விதையு
காலா முளை பொடித்தலங்குரித்தலாகும்
பாலார் முருத்து பயின். ௬

வெறி கடி வாசம் விரை மணங் கான் கந்தம்
நறை மன்றலே வம்பு நாற்றம்---பொறிவண்டார்
கட்டண்டேன் வேரி பிரச நறா நறவு
மட்டு மகரந்த மது. ௭

வளர்நொச்சியாஞ் சிந்துவார நீர்வாரங்
குளநெல்லெருவை சாய் கோரை---களகனஞ்
செந்நெல் விரீகி வளர்சாலி செஞ்சாலி
கன்னலிக்கு வேழங் கரும்பு. ௮

அருக்கமெருக்காகுந் தாதகி யாராத்தி
முருக்குக் கவிர் கிஞ்சுகமாகுங்--குருக்கத்தி
மாதவியா நிம்பம் வேம்பு மகிழ் வகுளம்
பாதிரி பாடலமேயாம். ௯

அரசு திருமரம் பிப்பிலம் போதி
மருதா மருச்சுன மா கொக்கு--விளரயாகுஞ்
சூதம் பனசம் பலா சுரை புன்னை வழை
மாதுளங்கமா மாதளை. ௰

பூவின்பெயர்—மலர், போது, அலர். ௩
பூங்கொத்தின்பெயர்—துணர், மஞ்சரி, தொத்து, இணர், வல்லரி. ௫
குலையின்பெயர்—தாறு. ௧
பழத்தின்பெயர்—பலம், காய், கனி. ௩
கதிரின்பெயர்—குரல். ௧
தோலின்பெயர்—செதிள். ௧
கொட்டையின்பெயர்—காழ், விதை. ௨
மூளையின்பெயர்—கால். ௧
அங்குரித்தலின்பெயர்—பொடித்தல். ௧
குருத்தின்பெயர்—பயின். ௧
நாற்றத்தின்பெயர்—வெறி, கடி, வாசம், விரை, மணம், கான், கந்தம், நறை, மன்றல், வம்பு. ௰
மதுவின்பெயர்—கள், தேன், வேரி, பிரசம், நறு, நறவு, மட்டு, மகரந்தம். ௮
நொச்சியின்பெயர்—சிந்துவாரம். ௧
குளநெல்லின்பெயர்—நீர்வாரம். ௧
கோரையின்பெயர்—எருவை, சாய், கணம். ௩
செந்நெல்லின்பெயர்—விரீகி, சாலி, செஞ்சாலி. ௩
கரும்பின்பெயர்—கன்னல், இக்கு, வேழம். ௩
எருக்கின்பெயர்—அருக்கம். ௧
ஆத்தியின்பெயர்—தாதகி, ஆர். ௨
முருக்கின்பெயர்—கவிர், கிஞ்சுகம். ௨
குருக்கத்தியின்பெயர்—மாதவி. ௧
வேம்பின்பெயர்—நிம்பம். ௧
மகிழின்பெயர்—வகுளம். ௧
பாதிரியின்பெயர்—பாடலம். ௧
அரசின்பெயர்—திருமரம், பிப்பிலம், போதி. ௩
மருதின்பெயர்—அருச்சுனம். ௧
மாவின்பெயர்—கொக்கு, சூதம். ௨
பலாவின்பெயர்—பனசம். ௧
சரபுன்னையின்பெயர்—வழை. ௧
மாதளையின்பெயர்—மாதுளங்கம். ௧

தடம் பெண்ணை தாலம் பனை சம்பு நாவல்
கடம்பாகு நீபங் கதம்ப--நெடுங்கமுகு
பூகமாம் புன்னை புன்னாகம் நாகம்
சாகமாந் தேக்காந்தரு. ௧௧

தாழைவ்ளர் நாளிகேரந் தடந்தெங்கு
வாழை கதலி மடற்கைதை--தாழை
செழுங்கேதகை யிதழி தேங் கடுக்கை கொன்றை
கொழுங் கன்னிகாரமாங் கோங்கு. ௧௨

அகரு வகில. தவுதும்பர மத்தி
தகைசேருங் காஞ்சனம் புன்கு--நிகரில்
இலவமாஞ் சான்மலி கர்ச்சூர மீந்தாம்
அலரி கரவீரமாம். ௧௩

பிரமதருவாம் பலாசாஞ் செயலை
அரிமருவுபிண்டி யசோகம் -விரிமலர்க்
குந்தங் குருந்தங் குட்சமாம் வெட்பாலை
சந்தனமாரஞ் சாந்தஞ் சந்து. ௧௪

நல்லகடுவா மரிதகி யாமலகம்
நெல்லியாந் தான்றி கலித்துருமம்--வில்லுவம்
மாலூரங் கூவிளை வெள்ளில் விளாவ்டம்
ஆல ழிஞ்சி லங்கோலமாம். ௧௫

சுரதருமந் தேவதாரு துணர்ப்பூங்
குராமரங் கோட்டமா மாச்சா--மராமரம்
சாலம் வானீரம் நீர்வஞ்சி யாஞ்சியோ
டேலமாமென்பர் துடி. ௧௬

பனையின்பெயர்—பெண்ணை, தாலம். ௨
நாவலின் பெயர்—சம்பு. ௧
கடம்பின்பெயர்—நீபம், கதம்பம். ௨
கமுகின்பெயர்—பூகம். ௧
புன்னையின்பெயர்—புன்னாகம், நாகம். ௨
தேக்கின்பெயர்—சாகம். ௧
தெங்கின்பெயர்—தாழை, நாளிகேரம். ௨
வாழையின்பெயர்—கதலி. ௧
தாழையின்பெயர்—கைதை. ௧
கொன்றையின்பெயர்—கேதகை, இதழி, கடுக்கை. ௩
கோங்கின்பெயர்—கன்னிகாரம். ௧
அகிலின்பெயர்—அகரு. ௧
அத்தியின்பெயர்—அதவு, உதும்பரம். ௨
புன்கின்பெயர்—காஞ்சனம். ௧
இலவின்பெயர்—சான்மலி. ௧
சுந்தின்பெயர்—கர்ச்சூரம். ௧
அலரியின்பெயர்—கரவீரம். ௧
அசோகின்பெயர்—செயலை, பிண்டி. ௨
குருந்தின்பெயர்—குந்தம். ௧
வெட்பாலையின்பெயர்—குடசம். ௧
சந்தனத்தின்பெயர்—ஆரம், சாந்தம், சந்து. ௩
கடுவின்பெயர்—அரிதகி. ௧
நெல்லியின்பெயர்—ஆமலகம். ௧
தான்றியின்பெயர்—கலித்துருகம். ௧
வில்வத்தின்பெயர்—மாலூரம், கூவிளை. ௨
விளவின்பெயர்—வெள்ளில். ௧
ஆலின்பெயர்—வடம். ௧
அழிஞ்சிலின்பெயர்—அங்கோலம். ௧
தேவதாருவின்பெயர்—சுரதுருமம். ௧
குராமரத்தின்பெயர்—கோட்டம். ௧
ஆச்சாமரத்தின்பெயர்—மராமரம், சாலம். ௨
நீர்வஞ்சியின்பெயர்—வானீரம். ௧
ஏலத்தின்பெயர்—ஆஞ்சி, ஏலம், துடி. ௨

காமலி யாத்திரத மிஞ்சி கறிமரிசம்
மாமிளகு திப்பிலி மாகதியாங்--தேமதுகம்
அட்டி மதுர மதூக மிருப்பையாம்
கட்டரும் பூவை காயா. கஎ

மல்லிகையாம் பூருண்டி சண்பகம்பித்தியோ
டேல்லிதட்சாதி யிருவாட்சி--நல்லனங்கம்
மாலதியே முல்லை மௌவ றள வூதிகை
நீலி நிகழவுரியாம். கஅ

கிளை வேணு வேர லமை கீசகம் விண்டு
முளை யரி கண் சந்தி பணை மூங்கில்--வளர்வரை
தூம்பு வேதிர் வேய் தட்டை முந்தூழ் துளை முட
ங்கல்
காம்பு திகிரி கழை. கக

செழுநாளிகம் வள்ளை சேம்பு சத்துடங்
கோழுமலராம்பல் குமுதங்--கழுநீராம்
செங்குவளை யிந்தீவரம் பானனீலமுடன்
பைங்குவளை நீலோற்பலம். உ0

வலம்புரிநந்தியா வர்த்தமேயாகுங் [ம்
குலம்பிய தோண்டையே கோவ்வை--நலஞ்சேரு
விண்டபூஞ் சேம்பரத்தை மேவியமந்தாரமெனக்
கோண்டார்பேரியோர் குறி. உக

முண்டக மம்புய மம்போருக முளரி
தண்டாமரை சலசம் வாரிசம்--புண்டரிகம்
பங்கயங் கஞ்சம் பதும மரவிந்தம்
அங்கமலங் கோகனகமாம். உஉ

*நாலாவதுமரப்பெயர்த்தொகுதி முற்றும்.*

நான்குதொகுதிக்குங் கூடியவெண்பா, கஅ0.

இஞ்சியின்பெயர்—ஆத்திரதம். ௧
மிளகின்பெயர்—கறி, மரீசம். ௨
திப்பிலியின்பெயர்—மாகதி. ௧
இருப்பையின்பெயர்—மதுகம், அட்டி, மதூரம், மதூகம். ௪
காயாவின்பெயர்—பூவை. ௧

மல்லியின்பெயர்—பூநண்டி. ௧
சண்பகத்தின்பெயர்—பிரீதி, சாதி. ௨
இருவாட்சியின்பெயர்—அனங்கம். ௧
முல்லையின்பெயர்—மாலதி, மௌவல், தளவு, ஊதிகை, ௪
அவுரியின்பெயர்—நீலி. ௧

மூங்கிலின்பெயர்—கிளை, வேணு, வேரல், அமை, கீசகம், விண்டு, முளை, அரி, கண், சந்தி, பணை, வரை, தூம்பு, வெதிர், வேய், தட்டை, முந்தூள், துளை, முடங்கல், காம்பு, திகிரி, கழை. ௨௨

வள்ளையின்பெயர்—நாளிகம். ௧
வேம்பின்பெயர்—சருடம். ௧
ஆம்பலின்பெயர்—குமுதம். ௧
செங்குவளையின்பெயர்—கழுநீர். ௧
கருங்குவளையின்பெயர்—இந்தீவரம், பானல், நீலம், நீலோற்பலம். ௪

நந்தியாவர்த்தத்தின்பெயர்—வலம்புரி. ௧
கொவ்வையின்பெயர்—தொண்டை. ௧
செம்பரத்தையின்பெயர்—மந்தாரம். ௧

தாமரையின்பெயர்—முண்டகம், அம்புயம், அம்போருகம், முளரி, சலசம், வாரிசம், புண்டரிகம், பங்கயம், கஞ்சம், பதுமம், அரவிந்தம், கமலம், கோகனகம், கூ

## ஐ ந் த ா வ து .

### இடப்பெயர்த்தொகுதி.

அவனி பொழில் பார் அகலிடம் வையம்
புவனி புவி புடவி பூமி—குவலயம்
ஞாலந் தரை தாரணி காசினி படி
தாலந் தரணி தலம். க

வசுந்தரை பூ வுலகு மண் கு நிலனே
வசுமதி சாந்தை வசுதை—யசலை
உகமே மகி பொறை கோவே விபுலை
சக மேதினி தாத்திரி. உ

இரவி பருப்பதம் விண்டு நகமா
திர மோதிம மிறும்பு நாகந்—தராதரம்
குத்திரம்பொச்சை சிலோச்சயங் கோத்திரம்
அத்திரி வேதண்டமாம். ௩

வரை திகிரி யோங்கல் குவடு மலை பூ
தர மசலங் குன்று சைலங்—கிரி கல்
சிலம்பு பொருப்பு சிகரி அடுக்கல்
விலங்கல் சிலை பிறங்கல் வெற்பு. ௪

நீர் புணரி நேமி பரவை வேலாவலயம்
ஆர்கலி யத்தி திரை நரலை—வாரிதி
பாராவாரம் பௌவம் வேலை முந்நீ ருவரி
காராழி வாரி கடல். ரு

சலராசி தோய நதி யம்பர முப்பு
சலநிதியே யுததி சிந்து—சலதி
அளப்பரியவெள்ள நதிபதி வீரை
அளக்கர் சமுத்திரமேயாம். சு



# பெயர்ப்பிரிவு.

## இடப்பெயர்த்தொகுதி.

பூமியின்பெயர்—அவனி, பொழில், பார், அகலிடம், வையம், புவனி, புவி, புடவி, குவலயம், ஞாலம், தரை, தாரணி, காசினி, படி, தாலம், தரணி, தலம், களம்.

வசுந்தரை, பூ, உலகு, மண், கு, நிலன், வசுமதி, சாந்தை, வசுதை, அசலை, உகம், மகி, பொறை, கோ, விபுலை, சகம், மேதினி, தாத்திரி. ௧௮. ஆக, ௩௫.

மலையின்பெயர்—இரவி, பருப்பதம், விண்டு, நகம், மாதிரம், ஓதிமம், இறும்பு, நாகம், தராதரம், குத்திரம், பொச்சை, சிலோச்சயம், கோத்திரம், அத்திரி, வேதண்டம். ௧௫.

வரை, கிரி, ஓங்கல், குவடு, பூதரம், அசலம், குன்று, சைலம், கிரி, கல், சிலம்பு, பொருப்பு, சிகரி, அடுக்கல், விலங்கல், சிலை, பிறங்கல், வெற்பு, ௧௮. ஆக, ௩௩.

சமுத்திரத்தின்பெயர்—நீர், புணரி, நேமி, பரவை, வேலாவலயம், ஆர்கலி, அத்தி, திரை, நரலை, வாரிதி, பாராவாரம், பௌவம், வேலை, முந்நீர், உவரி, ஆழி, வாரி, கடல். ௧௮

சலராசி, தோயம், நதி, அம்பரம், உப்பு, சலநிதி, உததி, சிந்து, சலதி, வெள்ளம், நதிபதி, வீரை, அளக்கர். ௧௩. ஆக, ௩௧

## ௪௰௫ வது. இடப்பெயர்த்தொகுதி.

செழுநீர்க்கிணறுகுங் கூவல் சேறு செய்
கழனி பழனம் வயலாம்—பழைய
வரம்பாங் குரம்பு வரம்பருகாங் கங்கு
கரம்பே யுவாரங் களர். ௭

கூலம் வாரந் தீரங் கோடு தடங் கரை கல்
லோலந் தரங்க மலைதிரை—வேலையிற்
றங்குகுமிழியே புற்புதமாம் பேனம்
பொங்குநுரையென்றே புகல். ௮

சைலாதி வெள்ளியங்குன்றந் தண்சோலைக்
கைலாயங் கண்ணுதலோன்வெற்பு—துயிலாதா
ராலயம் பொன்னசல மேரு வமரர்க்காய்
வேலைவிடமுண்டான்றன்வில். ௯

இமயம் மலையரச னீசன்றன்பாகத்
துமையாளைப்பெற்றவுரவோன்—சிமயப்
பொதியமலை மலயந் தென்மலை பூமிக்கு
மதிதமிழீந்தான் மலை. ௰

மொய் குறிஞ்சி பாலை மருதஞ் செழுமுல்லை
நெய்தலிவை யைந்து நிலமாகு—மைதீர்
நிவப்பு மிசை மீது மேடு யரமாகும்
அவற் பயம்பு பள்ளந் தாழ்வாம். ௧௧

ஈம மயானஞ் சுடலை சுடுகாடு
தூமமிகு சுள்ளை தோல்குயவர்--தாமட்
கலஞ் சுடுசூளை கமரும்விடரும்
நிலப்பிளப்பென்றேநிகழ்த்து. ௧௨

துர்க்க மருப்பஞ்சென்று துன்னற்கரியவிடங்
கற்கணெருங்கு மிட முரம்பா--நிற்குமொரு
வெள்ளிடையாதும் வெளி மருங்கு பக்கமாம்
நள்ளிடை நாப்பணடு. ௧௩

கிணற்றின்பெயர்—கூவல். க
வயலின்பெயர்—செறு, செய், கழனி, பழனம். ச
வரம்பின்பெயர்—குரம்பு. க
வரம்பருகின்பெயர்—கங்கு. க
பாழ்நிலத்தின்பெயர்—கரம்பு, உவர், களர். ங
கரையின்பெயர்—கூலம், வாரம், தீரம், கோடு, தடம். ரு
திரையின்பெயர்—கல்லோலம், தரங்கம், அலை. ங
குமிழியின்பெயர்—புற்புதம். க
நுரையின்பெயர்—பேனம். க
கைலாயத்தின்பெயர்—கைலாதி, வெள்ளியங்குன்றம், கண்ணுதலோன்வெற்பு. ங
மேருவின்பெயர்—துயிலாதாராலயம், பொன்னாசலம், *விடமுண்டோன்வில். ங
இமயத்தின்பெயர்—மலையரசன், உமையாளைப்பெற்ற உரவோன். உ
பொதியமலையின்பெயர்—மலயம், தென்மலை, †தமிழீந் தான்மலை. ங
ஐந்துநிலமாவன—குறிஞ்சி, பாலை, மருதம், முல்லை, நெய்தல்.
உயரத்தின்பெயர்—நிவப்பு, மிசை, மீது, மேடு. ச
பள்ளத்தின்பெயர்—அவல், பயம்பு, தாழ்வு. ங
சுடுகாட்டின்பெயர்—ஈமம், மயானம், சுடலை. ங
குயவர்மட்கலஞ்சுடுசூளையின்பெயர்—சுள்ளை. க
நிலப்பிளப்பின்பெயர்—கமர், விடர். உ
துன்னற்கரியவிடத்தின்பெயர்—துர்க்கம், அருப்பம். உ
கன்னெருங்குமிடத்தின்பெயர்—முரம்பு. க
வெளியின்பெயர்—வெள்ளிடை. க
பக்கத்தின்பெயர்—மருங்கு. க
நடுவின்பெயர்—நடு, இடை, நாப்பண். ங

---

*விடமுண்டோன், சிவன்.
†தமிழீந்தான், அகத்தியன்.

வடவாமுகந்தாழ் பிலங் கீழுலோகம்
படர் நாகலோகம் பவனங்—கடிய
இரு ளந்தகாரந் துவாந்தந் திமிரம்
நரகுநிரைய நரகம். ௧௪

அதர் நெறி யத்தஞ் செல வொழுக் காறு
வதி யிடவை மார்க்கம் வகுந்து--பதமே
சரி கடறு தாரி யியவை நடவை
வரி சுரம் வட்டை வழி. ௧௫

தெருவே மறுகு திகழ்வீதி ஞெள்ளல்
மருவம்பலம் பொதுவின் மன்றந்—திரிகவலை
பூவணிச்சந்தி சிருங்காடகஞ் சதுக்கம்
ஆவண மங்காடியாம். ௧௬

மதி லெயி லிஞ்சி யரண் புரிசை யாரல்
கத வரணந் தோட்டி வாரி—புதவு
அரரங் கபாடங் காப்பு நகரம்
புரநகரியாகும் புரி. ௧௭

நகர் மாளிகை குல மாடம் பவனம்
அக மனை வீடு புக்கில்லம்—புகலாகும்
தென்றலார் வேதிகை திண்ணையா மங்கணம்
முன்றிலுயர் முற்றமேயாம். ௧௮

இலஞ்சி கயங் கேணி கோட்டகமேரி
மலங்கன் மடு வோடை வாவி—சலந்தரம்
வட்டந் தடாக நளினி மலர்ப்பொய்கை
குட்டங் கிடங்கு குளம். ௧௯

கீழுலோகத்தின்பெயர்—பிலம். ௧
நாகலோகத்தின்பெயர்—பவனம். ௧
நரகத்தின்பெயர்—இருள், அந்தகாரம், துவாந்தம், திமிரம், நரகு, நிரயம். ௬

வழியின்பெயர்—அதர், நெறி, அத்தம், செலவு, ஒழுக்கு, ஆறு, வதி, இடவை, மார்க்கம், வகுந்து, பதம், சரி, கடறு, தாரி, இயவை, நடவை, வரி, சுரம், வட்டை. ௧௯

தெருவின்பெயர்—மறுகு, வீதி, ஞெள்ளல். ௩
அம்பலத்தின்பெயர்—பொதுவில், மன்றம். ௨
சந்தியின்பெயர்—கவலை, சிருங்காடகம், சதுக்கம். ௩
அங்காடியின்பெயர்—ஆவணம். ௧

மதிலின்பெயர்—எயில், இஞ்சி, அரண், புரிசை, ஆரல். ௫
கதவின்பெயர்—அரணம், தோட்டி, வாரி, புதவு, அரரம், கபாடம், காப்பு. ௭
நகரத்தின்பெயர்—புரம், நகரி, புரி. ௩

வீட்டின்பெயர்—நகர், மாளிகை, குலம், மாடம், பவனம், அகம், மனை, புக்கில்லம். ௮
திண்ணையின்பெயர்—வேதிகை. ௧
முற்றத்தின்பெயர்—அங்கணம், முன்றில். ௨

குளத்தின்பெயர்—இலஞ்சி, கயம், கேணி, கோட்டகம், ஏரி, மலிங்கல், மடு, ஓடை, வாவி, சலந்திரம், வட்டம், தடாகம், நளினி, பொய்கை, குட்டம், இடங்கு. ௧௬

நிசனந் தனியே நிர்ச்சன மேகாந்தம்
நிசமாமொருவந்தம் வேறிடம்—வசையில்லா
அந்தர்ப்புரங் கந்தவார மரசனுடை
சந்தமனை வாழுந்தலம். ௨௦

*ஐந்தாவது இடப்பெயர்த்தொகுதி முற்றும்.*

*ஐந்துதொகுதிக்குங்கூடியவெண்பா, ௱கூய.*

---

## ஆறுவது.

*பலபொருட்பெயர்த்தொகுதி.*

சாமீகரஞ் சாதரூபந் தமனியம்
மாமாழையாடகஞ் சாம்பூனத—மேமம்
கனக மிரணியங் காஞ்சன மீழம்
புனைபூரி சந்திரம் பொன். க

தாரமிரசதம் வெள்ளி களதவுதம்
தேரினுதும்பரந் தாம்பிரம்—பேர்செம்பாம்
ஆரகூடத்தோ டிரதியாம் பித்தளை
ஆர்வெண்கலங் கஞ்சமாம். ௨

இரும்பயங் கொல்லே யிடுஞ்சீருளியம்
விரும்பு தரா மதுகம் வெண்காழ்—பளிங்காகும்
சம்பகஞ் சந்திரகாந்தஞ் சுடுந்தீக்கல்
பம்புசுடர்க் காந்தம்பார். ௩

வலம்புரி கோடு வளைகம்பு நத்து
சலஞ்சலஞ் சங்கு பணில—மிலங்கிடு
நித்தில முத் தாரந் தரளங்குகிர் துப்பு
வித்துருமம் விற்பவளமாம். ச

ஏகாந்தத்தின்பெயர்—நிசனம், தனி, நிர்ச்சனம், ஒருவந்தம், வேறிடம். ௫

அரசர்மனைவிவாழுமிடம்—அந்தர்ப்புரம், கந்தவாரம். ௨

# பெயர்ப்பிரிவு.

## பலபொருட்பெயர்த்தொகுதி.

பொன்னின்பெயர்—சாமீகரம், சாதரூபம், தமனியம், மாழை, ஆடகம், சாம்பூனதம், ஏமம், கனகம், இரணியம், காஞ்சனம், ஈழம், பூரி, சந்திரம். ௧௩

வெள்ளியின்பெயர்—தாரம், இரசதம், களதவுதம், ௩
செம்பின்பெயர்—உதும்பரம், தாம்பிரம், ௨
பித்தளையின்பெயர்—ஆரகூடம், இரதி. ௨
வெண்கலத்தின்பெயர்—கஞ்சம். ௧

இரும்பின்பெயர்—அயம், கொல். ௨
ஈயத்தின்பெயர்—சீநம். ௧
தராவின்பெயர்—மதுகம். ௧
பளிங்கின்பெயர்—காழ். ௧
சந்திரகாந்தத்தின்பெயர்—சம்பகம், ௧
சூரியகாந்தத்தின்பெயர்—திக்கல். ௧

சங்கின்பெயர்—வலம்புரி, கோடு, வளை, கம்பு, நந்து, சலஞ்சலம், பணிலம். ௭
முத்தின்பெயர்—நித்திலம், ஆரம், தரளம். ௩
பவளத்தின்பெயர்—துகிர், துப்பு, வித்துருமம். ௩

மாணிக்க முத்து மரகத நீலமணி
பூணும் வைடூரியம் வைரம்—பேணும்
பவளமே கோமேதகம் புருடராகம்
நவமணியினுமங்களாம். ரு

இன்னயினிசொன்றி யுணு வசனம் போசனம்
நன்னருணவோதனம் போனக—மன்னம்
மடைநிமிர்தன் மூரல் புழுக்கல் பதங் கூழ்
அடிசில் மிசை சரு சோறும். சு

*ஆறுவது பலபொருட்பெயர்த்தொகுதி முற்றும்.*

*ஆறுதொகுதிக்குங் கூடியவெண்பா ஙகூசு.*

---

## ஏ ழா வ து.

*செயற்கைவடிவப் பெயர்த்தொகுதி.*

கார்முகங் கோதண்டந் தனு விற் கொடுமரம்
வார்சிலை சாபஞ் சராசனங்—கூர்வாளி
வெம்பகழி கோ பல்லம் பாணங் ககங் காண்டம்
அம்பு கணை கோல் சாயகம். க

சித்திரப் புங்கஞ் சிலீமுகமே கங்க
பத்திர மார்க்கண மேவாகு—மத்திரம்
வெய்யவிசிகமே யாசுகஞ் சீர்ச்சரம்
எய்யுங் கதிரமுமாமேன். உ

ஒங்கயில் சத்தி யுடம்பிடி வேலெஃகாம்
தாங்கலருங்கதை தண்டாகுந்—தூங்குளைக்
யானைதேர் மாவாண் மிடைசேனை தார் படை
தானை கடகந் தந்திரம். ங

நவமணிகளாவன—மாணிக்கம், முத்து, மரகதம், நீலம், வைடூரியம், வைரம், பவளம், கோமேதகம், புருடராகம்.

சோற்றின்பெயர்—அயினி, சொன்றி, உணா, அசனம், போசனம், உணவு, ஓதனம், போனகம், அன்னம், மடை, நிமிர்தல், மூரல், புழுக்கல், பதம், கூழ், அடிசில், மிசை, சரு. ௧௮

## பெயர்ப்பிரிவு.

### செயற்கைவடிவப்பெயர்த்தொகுதி.

வில்லின்பெயர்—கார்முகம், கோதண்டம், தனு, கொடுமரம், சிலை, சாபம், சராசனம். ௭

அம்பின்பெயர்—வாளி, பகழி, கோ, பல்லம், பாணம், ககம், காண்டம், கணை, கோல், சாயகம். ௧௦

புங்கம், சிலீமுகம், கங்கபத்திரம், மார்க்கணம், ஏவு, அத்திரம், விசிகம், ஆசுகம், சரம், கதிரம். ௧௦. ஆ, ௨௦

வேலின்பெயர்—அயில், சத்தி, உடம்பிடி, எஃகு. ௪

தண்டின்பெயர்—கதை. ௧

சதுரங்கமாவன—யானை, தேர், பரி, காலாள். ௪

சேனையின்பெயர்—தார், படை, தானை, கடகம், தந்திரம். ௫

௪அ எவது. செயற்கைவடிவப்பெயர்த்தொகுதி

முக்குடுமி வேல் சூல மாம்பரசு மொய்கணிச்சி
மிக்க மழு வாழி நேமியிவை—சக்கரமாம்
வெங்குலிசம் போ ரசனி வச்சிர நாந்தகம் வா
ளங் கரவாளங் கட்கமாம். ௪

மடி துகில் கோசிகங் காழகஞ் சேலை
புடவை கலிங்கந் தூசு—பட மாடை
புட்ட மறுவை புனைசாடி யம்பரம்
பட்டுடை சீலையெனப்பார். ௫

அணியிழை பூண் கல மாபரணமாகும்
மணிமௌலி சேகரங் கிரீட—மகுடமுடி
கங்கணமாகுங் கடகந் தொடி வளை
அங்குழை குண்டலந் தோடாம். ௬

கேயூர மங்கதந் தோளணியாமென்பர்
தூயமணியாழி மோதிரமாஞ்—சேயவொளி
ஏழ்கோவை மேகலை யெண்கோவை காஞ்சி யிதி
னீழ்கோவையே கலபமாம். ௭

தோங்கல் பிணைய றொடை வாசிகை சிகழி [தை
அங்கண்ணி செந்தே னணி யலங்கல—பைங்கோ
தேமென்றெரிய லொலியலே கத்திகை
தாம நறுமாலை தார். ௮

பரிபுர நூபுரம் பைம்பொன் ஞெகிழி
அரிபெய் சிலம்பின் பேராகுங்—குருமலியும்
பாதசாலங் காலணி கிண்கிணி சதங்கை
பாதகடகம் பாடகம். ௯

*ஏழாவது செயற்கைவடிவப்பெயர்த்தொகுதி முற்றும்.*

*ஏழுதொகுதிக்குங்கூடியவெண்பா, ௱௪௫*

சூலத்தின்பெயர்—முக்குடுமி, வேல். க
மழுவின்பெயர்—பரசு, கணிச்சி. உ
சக்கரத்தின்பெயர்—ஆழி, நேமி. உ
வச்சிரத்தின்பெயர்—குலிசம், அசனி, உ
வாளின்பெயர்—நாந்தகம், கரவாளம், கட்கம். ௩

சீலையின்பெயர்—மடி, துகில். கோசிகம், காழகம், சேலை, புடைவை, கலிங்கம், தூசு, படம், ஆடை, புட்டம், அறுவை, புனை, சாடி, அம்பரம், பட்டு, உடை. கஎ

ஆபரணத்தின்பெயர்—அணி, இழை, பூண், கலம். ச
முடியின்பெயர்—மௌலி, சேகரம், கிரீடம், மகுடம். ச
வளையின்பெயர்—கங்கணம், கடகம், தொடி. ௩
தோட்டின்பெயர்—குழை, குண்டலம். உ

தோளணியின்பெயர்—கேயூரம், அங்கதம். உ
மோதிரத்தின்பெயர்—ஆழி. க
எழுகோவைமணியின்பெயர்—மேகலை. க
எட்டுக்கோவைமணியின்பெயர்—காஞ்சி. க
பதினறுகோவைமணியின்பெயர்—கலபம். க

மாலையின்பெயர்—தொங்கல், பிணையல், தொடை, வாசிகை, சிகழி, கண்ணி, அணி, அலங்கல், கோதை, தெரியல், ஒலியல், கத்திகை, தாமம், தார். கச

சிலம்பின்பெயர்—பரிபுரம், நூபுரம், ஞெகிழி. ௩
காலணிப்பொதுப்பெயர்—பாதசாலம். க
சதங்கையின்பெயர்—கிண்கிணி. க
பாடகத்தின்பெயர்—பாதகடகம். க





# எட்டாவது.

*பண்புபற்றிய பெயர்த்தொகுதி.*

இலங்குதன் மின்ன லொளிர்த னகுதல்
துலங்க லலங்கல் விளங்க—னலங்கோள்
படரொளி தேயு கரங் கதிர் வில் வாள்
சுடர் கிரணஞ் சோதியெனச் சோல். க

ஈரமு நேயமும் பாசமுங் காதலும்
வாரமு மன்புக் கெனவகுத்த—பேராம்
குழவு மழவுந் தருணமு நாகும்
எழிலிளமைக் கெய்திய பேராம். உ

சுக நன்மை யின்ப மகிழ்வு பிரியம்
அகமலர்ச்சி யானந்தமாகுந்—தகுசரிதை
நல்லொழுக்கஞ் சீலமாஞ் சாரித்திரமென்பர்
செல்வம் விபவந் திரு. ஙூ

அரித மரித்த மவிரத மென்றும்
அநவரதஞ்சந்தத நித்த—மனுரதம்
எப்பொழுதுமாகு மினி யின்றெனுமிவை
இப்போழ் தெனவியம்பலாம். ச

கேத நடுக்கங் கிலேசங் தாபங் கவலை
வாதை யரந்தை வயா வருத்தம்—வேதனை
வன்படர் பீழை யிடுக்க ணிட ரிடும்பை
துன்ப மனுர் துக்கந் துயர். ரு

மேயவிசாலம் விரிவு விய லகலம்
ஆயமு மாய்தமு நீளமா—மீ யுயரம்
நேருஞ்சிகர நிமிர்தனி வப்புச்சம்
சீர்கனம் பாரமெனச் செப்பு. சா

# பெயர்ப்பிரிவு.

## பண்புபற்றியபெயர்த்தொகுதி.

இலங்குதலின்பெயர்—மின்னல், ஒளிர்தல், நகுதல், துலங்கல், அலங்கல், விளங்கல். சு

ஒளியின்பெயர்—தேயு, கரம், கதிர், வில், வாள், சுடர், கிரணம், சோதி. அ

அன்பின்பெயர்—ஈரம், நேயம், பாசம், காதல், வாரம். ரு

இளமையின்பெயர்—குழவு, மழவு, தருணம், நாகு, ச

இன்பத்தின்பெயர்—சுகம், நன்மை, மகிழ்வு, பிரியம், அகமலர்ச்சி, ஆனந்தம். சு

நல்லொழுக்கத்தின்பெயர்—சரிதை, சீலம், சாரித்திரம் ௩

செல்வத்தின்பெயர்—விபவம், திரு. உ

அநித்தத்தின்பெயர்—அநிதம். க

நித்தத்தின்பெயர்—அவிரதம், என்றும், அநவரதம், சந்ததம், அனாரதம், எப்பொழுதும். சு

இப்போழ்தின்பெயர்—இனி, இன்று. உ

துயரத்தின்பெயர்—சேதம், நடுக்கம், கிலேசம், தாபம், கவலை, வாதை, அரந்தை, வயா, வருத்தம், வேதனை, படர், பீழை, இடுக்கண், இடர், இடும்பை, துன்பம், அனார், துக்கம். கஅ

அகலத்தின்பெயர்—விசாலம், விரிவு, வியல். ௩

நீளத்தின்பெயர்—ஆயம், ஆய்தம். உ

உயரத்தின்பெயர்—மீ, சிகரம், நிமிர்தல், நிவப்பு, உச்சம். ரு

கனத்தின்பெயர்—பாரம். க

மதங் களி மத்த மபிமானஞ் செருக்கு
அதிகந் தவநனி யான்றல்—விதப்பே
சகல நிகல முழுது மகண்டம்
அகிலமெலா முற்றுமாம். ௭

அதிர்ப்பு நடுக்கங் குலைதல் பனித்தல்
விதிர்ப்பு துளங்கல் விதலை—வெதிர்ப்பு
கலித்தல் கம்பித்த லாலுத லாடல்
சலித்தலென்ப சஞ்சலமேயாம். ௮

இணைதல் பொருதல் கடுத்த னிகர்த்தல்
துணை கேழ் சம மொத்த றாக்கோ--டணைய னிபம்
மான லுறழ்தலே யன்னபடி யுவமைக்
கான்பெயரென்னலாம். ௯

உரந் துப் பெறழ் மிடன் மைந்து வலியாம்
குரங்கல் குடிலம் வளைவாந்—திரம்பெற
உள்ளுதல் சிந்தித்த லூழ்த்த னினைத்த லுனல்
கொள்ளுந் தியானங் குறி. ௧0

ஊகம் விகற்பம் பிரமம் பிராந்தி சந்
தேக மையங் கடுத்தல் சங்கையே—யாகும்
நவமு நவீனமு நூதனமும் வம்பும்
அவமில் புதுமையின்பேர். ௧௧

முன்பு பர மாதி முத லக்கிரந் தலையாம்
பின் பபர மந்தங் கடைமுடிவா—மன்பு
தயவா மருள் கருணை காருண்ணிய மீரம்
பயங்கர மச்சம் பயம். ௧௨

நிறைதல் கமம் பூரண மகிழ்வு பூரம்
குறைதலுஞ் சிங்கலு மெஞ்சல்—குறைவாம்
மரபு தகுதி பான் மாலை நீர் பெற்றி
பரிசு கிழமை படி. ௧௩

செருக்கின்பெயர்—மதம், களி, மத்தம், அபிமானம். ௪
அதிகத்தின்பெயர்—தவம், நனி, ஆன்றல், விதப்பு. ௪
எல்லாமின்பெயர்—சகலம், நிகலம், முழுதும், அகண்டம், அகிலம், முற்றும். ௬
நடுக்கத்தின்பெயர்—அதிர்ப்பு, குலைதல், பனித்தல், விதிர்ப்பு, துளங்கல், விதலை, வெதிர்ப்பு, கவித்தல், கம்பித்தல். ௯
ஆடலின்பெயர்—ஆடுதல். ௧
சஞ்சலத்தின்பெயர்—சலித்தல். ௧
உவமையின்பெயர்—இணைதல், பொருவல், கடுத்தல், நிகர்த்தல், துணை, கேழ், சமம், ஒத்தல், தூக்கு, அணையல், நிபம், மானல், உறழ்தல், அன்ன, படி. ௧௫
வலியின்பெயர்—உரம், துப்பு, எறழ், மிடல், மைந்து. ௫
வளைவின்பெயர்—குரங்கல், குடிலம். ௨
நினைத்தலின்பெயர்—உள்ளுதல், சிந்தித்தல், ஊழ்த்தல், உனல். ௪
தியானத்தின்பெயர்—ஊகம். ௧
பிராந்தியின்பெயர்—விகற்பம், பிரமம். ௨
சந்தேகத்தின்பெயர்—ஐயம், கடுத்தல், சங்கை. ௩
புதுமையின்பெயர்—நவம், நவீனம், நூதனம், வம்பு. ௪
முன்பின்பெயர்—பரம், ஆதி, முதல், அக்கிரம், தலை. ௫
பின்பின்பெயர்—அபரம், அந்தம், கடை, முடி. ௪
அன்பின்பெயர்—தயவு, அருள், கருணை, காருண்ணியம், ஈரம். ௫
பயத்தின்பெயர்—பயங்கரம், அச்சம். ௨
நிறைதலின்பெயர்—கமம், பூரணம், மகிழ்வு, பூரம். ௪
குறைவின்பெயர்—குறைதல், சிங்கல், எஞ்சல். ௩
* மரபின்பெயர்—தகுதி, பால், மாலை, நீர், பெற்றி, பரிசு, கிழமை, படி. ௮

---

* மரபு, குணம்.

பாண்டுரங் கவுரஞ் சுவேதஞ் சிதந் தவளம்
பாண்டரம் பால் வெண்மை யரிச்சுனம்--பாண்டு
சுசி யவதாரஞ் சுதை சுப்பிரங் கம்
விசிதம் வெளிறு வெளுப்பு. க௪

பெருமை தட மால் கய நனி பீடு
குரு மலிவு மல்லல் பொலிவா—மருவுரு
ஆகுஞ் சிறுமை யிலேசு தனு விலகு
தோக மணு வற்பந் துடி. க௫

கருமை கறை யசிதங் காளிமங் காளம்
இரு ணீலங் காழகஞ் சாம—மருணத்தி
ஞோடரத்தஞ் சோண முலோகிதங் கிஞ்சுகம்
யாடலஞ் செம்மையெனப்பார். க௬

அரித்து பலாச மரித மரி பச்சை
அரித்திராபம் பீதம் பொன்மைக்—குரித்தாம்
அரிபுகர் சந்தங் கேழ் மாமை யுரு வண்ணம்
குரு நிறஞ் சாயலெனக் கொள். க௭

மாசு தவறு வடு களங்கந் தீங்கு மறு
காசு நவை கோது கசடு பழி—யாசு தோம்
சீரில் பிழையே செயிர் பொக் கரில் குற்றம்
கோரஞ் சண்டங் குரூரமாம். க௮

மெய் யுண்மை சத்தியம் வாய்மை திடஞ் சரதம்
பொய் சடங் கூட மடி பொக்கமாஞ்--செய்கருமம்
மேவறம் புண்ணிய நல்வினை தீவினை
பாவங் கொடும் பாதகம். க௯

சாற்று கலி கூடஞ் சட மாயங் கைதவம்
தேற்றந் துணிவு தெளிவென்ப—ரேற்றமுறும்
தொன்மை புராணம் புராதனந் தொன்று புதி
தன்மை பழமையின் பேராம். உ0

வெளுப்பின்பெயர்—பாண்டுரம், சவுரம், சுவேதம், சிதம், தவளம், பாண்டரம், பால், வெண்மை, அரிச்சுனம், பாண்டு, சுசி, அவதாரம், சுதை, சுப்பிரம், கம், விசிதம், வெளிறு. கஎ

பெருமையின்பெயர்—தடம், மால், கயம், நனி, பீடு, குரு. சு

பொலிவின்பெயர்—மலிவு, மல்லல். உ

சிறுமையின்பெயர்—இலேசு, தனு, இலகு, தோகம், அணு, அற்பம், துடி. எ

கருமையின்பெயர்—கறை, அசிதம், காளிமம், காளம், இருள், நீலம், காழகம், சாமம். அ

செம்மையின்பெயர்—அருணம், அரத்தம், சோணம், உலோகிதம், கிஞ்சுகம், பாடலம். சு

பச்சையின்பெயர்—அரித்து, பலாசம், அரிதம், அரி. ச

பொன்மையின்பெயர்—அரித்திராபம், பீதம். உ

சாயலின்பெயர்—அரி, புகர், சந்தம், கேழ், மாமை, உரு, வண்ணம், குரு, நிறம், சாயல். க0

குற்றத்தின்பெயர்—மாசு, தவறு, வடு, களங்கம், தீங்கு, மறு, காசு, நவை, கோது, கசடு, பழி, ஆசு, தோம், பிழை, செயிர், பொச்சு, அரில். கஎ

குரூரத்தின்பெயர்—கோரம், சண்டம். உ

மெய்யின்பெயர்—உண்மை, சத்தியம், வாய்மை, திடம், சரதம். ரு

பொய்யின்பெயர்—சடம், கூடம், மடி, பொக்கம். ச

நல்வினையின்பெயர்—அறம், புண்ணியம். உ

தீவினையின்பெயர்—பாவம், பாதகம். உ

கைதவத்தின்பெயர்—கவி, கூடம், சடம், மாயம். ச

தேற்றத்தின்பெயர்—துணிவு, தெளிவு. உ

பழமையின்பெயர்—தொன்மை, புராணம், புராதனம், தொன்று, புதின்மை. ரு

துதைத னிபிட நிரந்தரந் துன்றல்
பொதுள றுவன்ற றிணுங்க—லதிகம்
மிடைதல் செறிதலே மிண்டுதல் பம்பல்
அடைத னெருங்குதலே யாம். ௨௧

போற்று சயம் விசயம் வென்றி யடல் வெற்றியே
தோற்ற லுருத்தன் மலர்தலாங்—தோற்றிடல்
கோறல் செகுத்த லழித்தல் கதங் கோபம்
சீறலே சீற்றஞ் சினம். ௨௨

*எட்டாவது பண்புபற்றிய பெயர்த்தொகுதிமுற்றிற்று.*

எட்டுத்தொகுதிக்குங் கூடியவெண்பா, ௱௬௭.

---

## ஒன்பதாவது.

*செயல்பற்றிய பெயர்த்தொகுதி.*

செயல்விதி கன்மங் கருமமே செய்தொழில்
அயர்தல் வினைதலே யாற்றல்—குயிறலாம்
சிட்டித்தன் மற்றுஞ் சிருட்டித்த லுண்டாக்கல்
ஒட்டலுடன் படைத்தலாம். ௧

வந்தனை காணல் வணங்கல் பணிதலே
தந் தலைதாழ்தல் சலாஞ்செய்தல்—முந்தித்
தொழுதலே தெண்டன் தொடர்ந்து முயங்கல்
தழுவுதல் விள்ளலெனச்சாற்று. ௨

வதுவை கைப்பற்றன் மணஞ்செய்தல்கல்யாணம்
விதியுளி வேட்டல் விவாகம்—புதுமன்றல்
தொடலை விலாசனை வண்டல் கிரீடை
கேடவரலுங் கேளிக்கையாம். ௩

நெருங்குதலின்பெயர்—துதைதல், கிபிடம், கிரந்தரம், துன்றல், பொதுளல், துவன்றல், திணுங்கல், அதிகம், மிடைதல், செறிதல், மிண்டுதல், பம்பல், அடைதல். கரு

வெற்றியின்பெயர்—சயம், விசயம், வென்றி, அடல். ச
*தோற்றிடலின்பெயர்—தோற்றல், உருத்தல், மலர்தல். ரு
தோறலின்பெயர்—செகுத்தல், அழித்தல். உ
சினத்தின்பெயர்—கதம், கோபம், சீறல், சீற்றம். ச

---

# பெயர்ப்பிரிவு.

## செயல்பற்றியபெயர்த்தொகுதி.

செய்தொழிலின்பெயர்—செயல், விதி, கன்மம், கருமம். ச

அயர்தலின்பெயர்—வினைதல், ஆற்றல், குயிறல். ரு
படைத்தலின்பெயர்—சிட்டித்தல், சிருட்டித்தல், உண்டாக்கல், ஒட்டல், படைத்தல். ரு

வந்தனையின்பெயர்—காணல், வணங்கல், பணிதல், தலைதாழ்தல், சலாஞ்செய்தல், தொழுதல், தெண்டன். எ

தழுவலின்பெயர்—முயங்கல், விள்ளல். உ

வதுவையின்பெயர்—கைப்பற்றல், மணஞ்செய்தல், கல்யாணம், விதியுளி, வேட்டல், விவாகம், மன்றல், எ

கேளிக்கையின்பெயர்—தொடலை, விலாசனை, வண்டலி, கிரீடை, கெடவரல். ரு

---

* தோற்றிடல், தோன்றுதல்.

௫அ கூவது செயல்பற்றியபெயர்த்தொகுதி

ஓட லிரித லுடைதன் முரிதலாம்
ஈாடலு நேடலுந் தேர்தலுந்—தேடல்
பரித்தல் பொறுத்தல் சுமத்த லெடுத்தல்
தரித்தலிவை தாங்குதலேயாம். ௬

அசன நுகர்த லயிற லருந்தன்
மிசைத லுண றுய்த்தன் மாந்தல்—புசித்தலே
மிச்சின் மிசை சேட மிக்கதாம் மேலுள்ள
வெச்சி லுச்சிட்ட மெனலாம். ௫

காத லெறித றுமித்த றுணித்தலே
பேதித்தல் கண்டித்த றுண்டித்தல்—சேதித்தல்
வெட்ட லரித லறுத்தல் விடுவாய் செய்தல்
சுட்ட லெரித்தல் சுடல். ௬

தணித்தலே தீர்த்தல் விரித்த லவிழ்த்தல்
பிணித்தலாங் கட்ட ஞெருடுத்தல்—பிணைத்தல்
அரங்க லழுங்க லழுங்குதலாகும்
உரிஞ்ச லுராயப்போதலாம். ௭

விழாவாஞ் சாறுஞ் சேறு மேவு பலிபத்தி
வழிபாடு பூசை மகஞ்சித்-தெழில் வேள்வி
பண்ணை கெடவர லோரையே பொய்தலிவை
வெண்ணகையார் விளையாட்டாம். ௮

இன்மையாமோற்க மிலம்பாடிவை வறுமை
புன்மையிலாவண்மைபுரவுகொடை-நன்கவிகை
வேளாண்மை யீதல் வழங்கல் கொடுத்தலே
தாளாண்மை யாமுயற்சிதான். ௯

*ஒன்பதாவது செயல்பற்றியபெயர்த்தொகுதி முற்றும்.*

ஒன்பதுதொகுதிக்குங்கூடியவெண்பா, ௱௯௫.

ஓடலின்பெயர்—இரிதல், உடைதல், முரிதல். ௩
தேடலின்பெயர்—நாடல். நேடல், தேர்தல். ௩
தாங்குதலின்பெயர்—பரித்தல, பொறுத்தல், சுமத்தல், எடுத்தல், தரித்தல். ௫

புசித்தலின்பெயர்—அசனம், நுகர்தல், அயிறல், அருந்தல், மிசைதல், உணல், துய்த்தல், மாந்தல். ௮
எச்சிலின்பெயர்—மிச்சில், சேடம், உச்சிட்டம். ௩

வெட்டலின்பெயர்—காதல், எறிதல், துமித்தல், துணித்தல், பேதித்தல், கண்டித்தல், துண்டித்தல், சேதித்தல், அரிதல், அறுத்தல், விடுவாய்செய்தல். ௧௧
சுடுதலின்பெயர்—சுட்டல், எரித்தல். ௨

அவிழ்த்தலின்பெயர்—தணித்தல், தீர்த்தல், விரித்தல். ௩
பிணைத்தலின்பெயர்—பிணித்தல், கட்டல், தொடுத்தல். ௩

அழுங்குதலின்பெயர்—அரங்கல், அழுங்குதல். ௨
உரிஞ்சலின்பெயர்—உராய்ப்போதல். ௧

விழாவின்பெயர்—சாறு, சேறு. ௨
வழிபாட்டின்பெயர்—பலி, பத்தி, பூசை. ௩
வேள்வியின்பெயர்—மகம், சித்து. ௨
வெண்ணகையார்விளையாட்டின்பெயர்—பண்ணை, கெடவரல், ஓரை, பொய்தல். ௪

வறுமையின்பெயர்—இன்மை, ஒற்கம், இலம்பாடு. ௩
கொடையின்பெயர்—வண்மை, புரவு, கவிகை, வேளாண்மை. ௪
கொடுத்தலின்பெயர்—ஈதல், வழங்கல். ௨
முயற்சியின்பெயர்—தாளாண்மை. ௧

## பத்தாவது.

### ஒலிபற்றிய பெயர்த்தொகுதி.

கிளவி மொழி பேச்சு வாசகஞ் சொன்மாற்றம்
அளவிலுரை வாணி வார்த்தை—விளம்பல்
புகற னுவற லறைத லிசைத்தல்
பகர்தலிவை பன்னுதலேயாம். க

வழுத்தல் புகழ்ச்சி துதி வாழ்த் தேத்தல் போற்றல்
பழிச்சல் பரசல் பரவுந்—தொழிற்பேராம்
ஆட னிருத்த நட நட்டங் கூத்திசை
கூடும் படிகமுங் கூறு. உ

மழலை மிழ்ற்றல் வருங்குதலை கொஞ்சல்
மிழலைநிரம்பா விழைசொற்--பழிமொழியே
அம்ப லபவாத மங்கதஞ் சூழலராம்
வெம்பு சிறுசொற் றீச்சொற் றாறு. ௩

குஞ்சங் குறளை கொடுவாயே குண்டியம் [ல்
விஞ்சுபிசுனம் விரி தொடுப்பு—துஞ்சுபொய்ச்சொ
ஆசிலிடக்கரடக் கலுடன் கூதனம்
பேசின் மறைச்சொற்பெயர். ௪

கொண்டாடன் மெய்ச்சல் குலாவலே பாராட்டு
பண்பார் பெருஞ்சொற் பலரறிசொற்--றண்டா
நயச்சொ னளினச்சொ ளுடுமநர்த்தம்
பயனின் மொழியாம் பகர். ரு

கூறியது கூறல் குறித்கிற் புனருத்தி
எறுநகைச்சொ லியலசதி--வீறில்லார்
மிக்குச் சிரித்து விளம்பல் விடாதுரைத்தல்
கத்தல் பிதற்றலாய்க்காண்.

# பெயர்ப்பிரிவு.

## ஒலிபற்றியபெயர்த்தொகுதி.

வார்த்தையின்பெயர்—கிளவி, மொழி, பேச்சு, வாசகம், சொல், மாற்றம், உரை, வாணி. ௮

பன்னுதலின்பெயர்—விளம்பல், புகறல், நுவறல், அறைதல், இசைத்தல், பகர்தல். ௬

பரவலின்பெயர்—வழுத்தல், புகழ்ச்சி, துதி, வாழ்த்து, ஏத்தல், போற்றல், பழிச்சல், பரசல், ௮

ஆடலின்பெயர்—நிருத்தம், நடம், நட்டம், கூத்து, படிகம். ௫.

மழலையின்பெயர்—மிழற்றல், குதலை, கொஞ்சல், மிழலை, நிரம்பாச்சொல், ௫.

பழிமொழியின்பெயர்—அம்பல், அபவாதம், அங்கதம், அலர், சிறுசொல், தீச்சொல், தூறு. ௭

பொய்ச்சொல்லின்பெயர்—குஞ்சம், குறளை, கொடுவாய், குண்டியம், பிசுனம், தொடுப்பு. ௬

மறைத்தசொல்லின்பெயர்—இடக்கரடக்கல், கூதனம். ௨

கொண்டாடலின்பெயர்—மெச்சல், குலாவல், பாராட்டுதல். ௩

பலரறிசொல்லின்பெயர்—பெருஞ்சொல். ௧

நயச்சொல்லின்பெயர்—நளினம். ௧

பயனின்மொழியின்பெயர்—அநர்த்தம். ௧

கூறியதுகூறலின்பெயர்—புனருத்தி. ௧

நகைச்சொல்லின்பெயர்—அசதி, சிரித்துவிளம்பல். ௨

விடாதுரைத்தலின்பெயர்—கத்தல், பிதற்றல். ௨

சங்கதந் தேவச்சொல் சாலார்க் கவப்பிரஞ்சம்
துங்கர் பிராகிருதஞ் சூழுவா-ரிங்கிதிற்சேர்
தற்பவ மாரியந் தற்சமந்தான் போது
சொற்றேசியந் திசைச்சொல்லாம். ௭

வினாவல் கடாவல் விடை யுத்தரமே
வினாவிடைகூட்டி விளம்ப--றனையுரைப்பிற்
சல்லாபஞ் சொன் முகமன் சன்மான மின்னயம்
எல்லா முபசாரமென். ௮

சிலம்ப லிசை நாதங் கம்பலை சும்மை
அலம்ப லரவந் துழனியார்ப்பு--புலம்பொலி
கலித்த னுவைத்த லரற்ற லிரங்கல்
ஒலித்த லிரட்டலுமாமோர். ௯

திமிலந் துவைத்த றெழித்த லதிர்ச்சி
குமுதமுரற்றல் குமுற--றமரமாம்
கலகங் குமிலங் களகளம் பூசல்
வலுபேரொலிக்காம் வழக்கு. ௰

அம்மென லொல்லென லார்ந்திட்டிமுமெனல்
கொம்மெனல் கல்லெனல்கோவென-லிம்மெனல்
வல்லெனல் பொள்ளெனல் வாய்ந்தவிவையாவுஞ்
சொல்லி லநுகரணத் தொனி. ௧௧

கடகடென்லோடு கலகலெனல் சாலப்
படபடெனலின்னும் பகரிற்--றிடுதிடென்ல்
இட்ட நெறுநெறென லீதுபய சத்தமெனத்
திட்டமுறச் சொன்னார் தெளிந்து. ௧௨

துழனி கலகலஞ் சொல்பறவைச் சத்தம்
கழிபெருங் கோலாகலமே—குழவிலங்கின்
அஞ்சத்தஞ் சீலை யிலையாலன் மருமராஞ்சம்
சிஞ்சிதம் பூணின் சிலை. ௧௩

தேவர்மொழியின்பெயர்—சங்கதம். ௧
இழிசனர்மொழியின்பெயர்—அவப்பிரஞ்சம். ௧
பெரியோர்மொழியின்பெயர்—பிராகிருதம். ௧
ஆரியமொழியின்பெயர்—தற்பவம். ௧
பொதுமொழியின்பெயர்—தற்சமம். ௧
திசைச்சொல்லின்பெயர்—தேசியம். ௧

வினாவலின்பெயர்—கடாவல். ௧
விடையின்பெயர்—உத்தரம். ௧
வினாவிடைகூடியவற்றின்பெயர்—சல்லாபம். ௧
உபசாரத்தின்பெயர்—முகமன், சனமானம், நயம். ௩

ஒலியின்பெயர்—சிலம்பல், இசை, நாதம், கம்பலை, சும்மை, அலம்பல், அரவம், துழனி, ஆர்ப்பு. புலம்பு. ௧௦

ஒலித்தலின்பெயர்—கலித்தல், துவைத்தல், அரற்றல், இரங்கல், இரட்டல். ௫

பேரொலியின்பெயர்—திமிலம், துவைத்தல், தெழித்தல், அதிர்ச்சி, குமுதம், உரற்றல், குமிறல், தமரம், கலகம், குமிலம், களகளம், பூசல். ௧௨

அநுகரணத்தொனியின்பெயர்—அம்மெனல், ஒல்லெனல், இழுமெனல், கொம்மெனல், கல்லெனல், கோவெனல், இம்மெனல், வல்லெனல், பொள்ளெனல். ௯

உபயசத்தத்தின்பெயர்—கடகடெனல், கலகலெனல், படபடெனல், திடுதிடெனல், நெறுநெறெனல். ௫

பறவைச்சத்தத்தின்பெயர்—துழனி, கலகலம். ௨
விலங்கின்றொனி—கோலாகலம். ௧
சிலையானுமிலையானுமெழுஞ்சத்தத்தின்பெயர்—மருமராஞ்சம். ௧
பூணால்வருமொலியின்பெயர்—சிஞ்சிதம். ௧

௯௪ வது ஒலிபற்றியபெயர்த்தொகுதி.

மந்தரங் காகுளி மந்த விசைப்பேரே
சந்தமுறு மத்திமஞ் சான்மதுர—முந்துசமன்
ஓசையாந் தார முடனுச்சமது வல்லிசையாம்
பேசிஞெலிப் பேதமாய்ப்பேண். ௧௪

கந்தருவங் காந்தாரங் காமரம் பண் கீதம்
வந்த குழல் கானம் வரிபாணி--முந்திசைப்பாட்
டாம்பலுடன் வாரி யரியதொரு வங்கியமுந்
தேங்கோ ளிசைக்குழலாய்ச் செப்பு. ௧௫

ஊதியஞ் சால்பே யுறுதி வித்தை விஞ்சை கலை
மேதையே புந்தி மிகுஞானங்—தீதில்லா
வெண்பா வகவல் விரிகலிப்பா வஞ்சிப்பா
வொண்பா மருட்பா வைம்பா. ௧௬

நூலே பனுவ னுவல் கல்வி தந்திரம்
மேலாகும் வேதம் விரிசுருதி—நான்மறைப்பேர்
ஆகம மீசனருள்வாக் கமலவுரை
பாகமுளார் போற்றும் பயன். ௧௭

இசையொளியேற்றங் கியாதஞ் சுலோகம் [ழ்
திசைபோகுந் தோற்றஞ் செறிசொல்-வசையில்புக
சீரோடு கீர்த்தி திகழு மிகுபுகழ்
ஆராசி வாழ்த்து பல்லாண்டு. ௧௮

படலஞ் சருக்கம் பரிச்சேதங் காண்டம்
இடரிலிலம்பக மெல்லாந்—தொடர்பினுறப் [கள்
பல்பொருள்கள் வைப்பாம் படரினிப்பொருட்
சொல்லிய லோத்தென்னவே சூழ்ந்து. ௧௯

கவி கவிதை செய்யுள் கவின்றொடர்பு தூக்கு
நவ யாப்பு பா பாட்டிணை—மிவையாகும்
வெண்பா முதற்பா வெள்ளை விளங் ககவல்
பண்பாரு மாசிரியம்பா. ௨

மந்தவிசையின்பெயர்—மந்தரம், காகுளி. உ
சமனிசையின்பெயர்—மத்திமம், மதுரம். உ
வல்விசையின்பெயர்—தாரம், உச்சம். உ

இசைப்பாட்டின்பெயர்—கந்தருவம், காந்தாரம், காமரம், பண், கீதம், குழல், கானம், வரி, பாணி. க
இசைக்குழலின்பெயர்—ஆம்பல், வாரி, வங்கியம். ௩

கலையின்பெயர்—ஊதியம், சால்பு, உறுதி, வித்தை, விஞ்ஞை. ரு
ஞானத்தின்பெயர்—மேதை, புந்தி. உ
ஐம்பாவாவன—வெண்பா, அகவல், கலிப்பா, வஞ்சிப்பா, மருட்பா. ரு

நூலின்பெயர்—பனுவல், கல்வி, தந்திரம். ௩
மறையின்பெயர்—வேதம், சுருதி. உ
ஆகமத்தின்பெயர்—ஈசன்வாக்கு, அமலவுரை. உ

புகழின்பெயர்—இசை, ஒளி, ஏற்றம், கியாதம், சுலோகம், தோற்றம், சொல். எ
மிகுபுகழின்பெயர்—சீர், கீர்த்தி. உ
ஆசியின்பெயர்—வாழ்த்து, பல்லாண்டு. உ

பலபொருட்டொடர்பின்பெயர்—படலம், சருக்கம், பரிச்சேதம், காண்டம், இலம்பகம். ரு
இனப்பொருட்டொடர்பின்பெயர்—இயல், ஒத்து. உ

பாட்டின்பெயர்—கவி, கவிதை, செய்யுள், தொடர்பு, தூக்கு, யாப்பு, பா. எ
வெண்பாவின்பெயர்—முதற்பா, வெள்ளை. உ
அகவலின்பெயர்—ஆசிரியம். க

பதிகம் புனைந்துரை பாயிரமாகும்
இதியாசங் காட்டேன் றிசைப்ப—ருதாரணப்பேர்
வஞ்சினஞ் சத்தியம் வட்டித்த லாணையெலாம்
மேஞ்சில் சபத விசை. உக

பாசுரம் வார்த்தை பகர்வலந்தம் வாசகங்
தேசாரும் வாக்குத் திகழ்வசனம்--கூசக்
கழற லிடித்தல் கதித்துறுதிச் சோல்லென்
றழிபின்றுரைத்தாரறிந்து. உஉ

அறைகூறல் சோற்பழித்த லாமே முதுசோன்
முறைசேரு மூதுரை முன்சோற்—றிறமுடனே
தன்மேம்பாட்டுச்சோற் ருனக நெடுமொழி
மன்னி வியப்பின் வரும். உரு

அந்தி லிருந் திட்ட ரோ விகுந் தில் கா போம்
தந் தாம் பிற பிறக்கு தா னின்று--மன் மன்றே
மா மாது மாதோ வான் மற் றத் தன் றேருஞ் சின்
ஆ மாங் கீதெல்லாமசை. உச

மாவே வியங்கோள் வருமசையா மம்ம வுரை
மேவசையேன்றே விளம்புவார்—பாவார்
இக மியா மோ மதி யா வித்தை யாழ
பகர் முன்னிலை யசையாய்ப்பார். உரு

*பத்தாவது ஒலிபற்றியபெயர்த்தொகுதி முற்றும்.*

*பத்துத்தொகுதிக்குங் கூடியவெண்பா, உ௱.*

பாயிரத்தின்பெயர்—பதிகம், புனைந்துரை. உ
உதாரணத்தின்பெயர்—இதியாசம், காட்டு. உ
சபதவிசையின்பெயர்—வஞ்சினம், சத்தியம், வட்டித்தல், ஆணை. ச

வினைத்தின்பெயர்—பாசுரம், வார்த்தை, வலந்தம், வாசகம், வாக்கு. ரு
உறுதிச்சொல்லின்பெயர்—கழறல், இடித்தல். உ

சொற்பழித்தலின்பெயர்—அறைகூறல். க
முதுசொல்லின்பெயர்—மூதுரை, முன்சொல். உ
தன்மேம்பாட்டுச்சொல்லின்பெயர்—நெடுமொழி. க

அசைச்சொல்லின்பெயர்—அந்தில், இருந்து, இட்டு, அரோ, இகும், தில், கா, போம், தம், தாம். பிற, பிறக்கு, தான், நின்று, மன், மன்னே, மா, மாது, மாதோ, ஆல், மற்று, அச்து, அன்று, ஒரும், சின், ஆம், ஆங்கு. உஎ

வியங்கோளசைச்சொல்லின்பெயர்—மா. க
உரையசையின்பெயர்—அம்ம. க
முன்னிலையசையின்பெயர்—இக, மியா, மோ, மதி, யா, இத்தை, யாழ. எ

# பதினொராவது

*ஒருபொருட் பலபெயர்த் தொகுதி.*

அரி பன்றி தேரை கிளி பச்சை சிங்கம்
பரி கவி பாம் பிந்திரன் மால்கா--லிருசுடர் தீ
கோ விறை திக்குக் கிரணஞ் சலங் குலிசம்
ஆ மலை கண் பார் சுவர்க்க மம்பு. க

இலையு நிலமுந் தலங் கோடு வாளு
முலையுங் குயம் வில் லொளியுஞ்-சிலையும்
கரி யானை சான் றிருந்தையாஞ் சிலம்பு குன்று
அரிநூபுர மொலியேயாம். உ

சய மயிர் பானு கூட்டம் விசயம்
அயில் வேலுங் கூர்மையுமாகுந்--துயரமே
போகலே யுள்ளல் படரே விழிவு கேடல்
சாதல் வேர் வேணி சடை. ௩

ஆழி வேலாவலயஞ் சக்கர மோதிரமாம்
பாழிபெருமை குகை வலியே--தாழையாந் [ல்
தெங்கு மடற்கைதையா மாறுடனே யாடை தோ
தோங்க லொலியலெனச்சொல். ச

குடையுங் கோடையுங் கவிகையா மென்பர்
படை. சேனை யாயுதமாகும்--விடம் வட
மாலமா மோத்தல் பகைத்த லுறழ்தலே
தாலமாம் பெண்ணை தலம். ரு

# பெயர்ப்பிரிவு.

## ஒருபொருட்பலபெயர்த்தொகுதி.

அரி எ—து பன்றி, தேரை, கிளி, பச்சை, சிங்கம், பரி, (குதிரை) கவி, (குரங்கு) பாம்பு, இந்திரன், மால், (விட்டுணு) கால், (காற்று) இருசுடர், (ஆதித்தன், சந்திரன்) தீ.

கோ எ—து இறை, (இராசன்) திக்கு, கிரணம், சலம், குலிசம், ஆ, (பசு) மலை, கண், பார், (பூமி) சுவர்க்கம், அம்பு.

தலம் எ—து இலை, நிலம்.

குயம் எ—து கொடுவாள், முலை.

வில் எ—து ஒளி, சிலை, (வில்)

கரி எ—து யானை, சான்று, (சாட்சி) இருந்தை, (கரி)

சிலம்பு எ—து குன்று, (மலை) நூபுரம், (சிலம்பு) ஒலி.

சயம் எ—து அயிர், (சருக்கரை) பானு, (சூரியன்) கூட்டம், விசயம், (வெற்றி)

அயில் எ—து வேல், கூர்மை.

படர் எ—து துயரம், போகல், உள்ளல், (நினைத்தல்)

வீழிவு எ—து கெடல், சாதல்.

சடை எ—து வேணி, (சடை) வேர்.

ஆழி எ—து வேலாவலயம், (சமுத்திரம்) சக்கரம், மோதிரம்.

பாழி எ—து பெருமை, குகை, வலி.

தாழை எ—து தெங்கு, கைதை, (தாழை)

ஒலியல் எ—து ஆறு, ஆடை, (சீலை) தோல், தொங்கல், (மாலை)

கவிகை எ—து குடை, கொடை.

படை எ—து சேனை, ஆயுதம்.

ஆலம் எ—து விடம், (நஞ்சு) வடம், (ஆலமரம்)

உறழ்தல் எ—து ஒத்தல், பகைத்தல்.

தாலம் எ—து பெண்ணை, தலம், (பூமி)

கந்த மணங் கிழங்கு மேக முழை கழுத்து
கந்தரமாகுங் கழை கரும்பு சந்தி
கறையாகுஞ் செந்நீர் கருமை யுரல் குற்றம்
சிறையாகுங் காவல் சிறகு. சு

கடல் வட்டந் தேர்க்கால் கழை வண்டு பூமி
விடுதிகிரி நேமி விறன்மோ--டடலாம்
கரங்கிரண நஞ்சு கழுதையுடன் கைப்பேர்
கருமை வெகுளி கறுப்பு. எ

கடியே புதுமை மண மின்பங் காவல்
கடிதல் விரை வச்சங் காலம்--மடிவயிறு
சோம்பு பருப்பதமுந் தூறு மிறும்பாகும்
கூம்ப லொடுங்கல் குமிழ். அ

வளம் வலி யாணர் மணங் கடி நாற்றம்
நளிபெருமை சீதஞ் செறிவுந்--தளிமந்தான்
மெத்தை யழகு விரிதேக்கு சாகமா
டத்தங் கரமொரு நாளாம். கூ

பிரமங் கடவு ளூடு வோர்புராணம்
விரி மந்திர முத்தி வேதம்—மருடவழ்
கோம்மை யிளமை குயம் வட்டஞ் சுந்தரம்
செம்மை பெருமை சிவ்ப்பு. கo

கந்தம் எ—து மணம், கிழங்கு.
கந்தரம் எ—து மேகம், முழை, (குகை) கழுத்து.
கழை எ—து கரும்பு, சந்தி, (மூங்கில்)
கறை எ—து செந்நீர், (இரத்தம்) கருமை, உரல், குற்றம்.
சிறை எ—து காவல், சிறகு.

நேமி எ—து கடல், வட்டம், தேர்க்கால், கழை, (மூங்கில்) விண்டு, (மலை) பூமி, திகிரி, (சக்கராயுதம்)
விறல் எ—து மோடு, (பெருமை) அடல், (வலி)
கரம் எ—து கிரணம், நஞ்சு, கழுதை, கை.
கறுப்பு எ—து கருமை, வெகுளி, (கோபம்)

கடி எ—து புதுமை, மணம், இன்பம், காவல், கடிதல், விரைவு, அச்சம், காலம்.
மடி எ—து வயிறு, சோம்பல்.
இறும்பு எ—து பருப்பதம், (மலை) தூறு, (சிறுசெடி)
கூம்பல் எ—து ஒடுங்கல், குமிழ், (மரம்)

வளம் எ—து வலி, யாணர், (அழகு)
மணம் எ—து கடி, (விவாகம்) நாற்றம்.
களி எ—து பெருமை, சீதம், (குளிர்மை) செறிவு.
தளிமம் எ—து மெத்தை, அழகு.
சாகம் எ—து தேக்கு, ஆடு.
அத்தம் எ—து கரம், (கை) ஒருநாள்.

பிரமம் எ—து கடவுள், நடு, பிரமபுராணம், மந்திரம், முத்தி, (மோட்சம்) வேதம், மருள், (கலக்கம்) தவம்.
கொம்மை எ—து இளமை, குயம், (முலை) வட்டம், சுந்தரம், (அழகு)
செம்மை எ—து பெருமை, சிவப்பு.

தட்டையாங் கீசகந் தத்தை கடி கருவி
முட்டை யுறுப்பு கவடு சினை--பட்ட மடு
சீலை வழி கவரி யாயுதம் வல் சூது
மாலைநோய் மாலைமதி. கக

உளையே புரவிமயிர் கூந்த லோசை
அளையிட மோரா மழுங்கல்—பிளிறலே
இழையே யணிகல னூலு மதன்பேர்
குழைசேறு குண்டலமுங் கூறு. கஉ

தனபதி சோமன் குபேரனுங் காணில்
வன மாமை தானுந் துழாயும்—கனமார்
நல மாசை யச்ச நோய் தெய்வம் வருத்தம்
கோலை தெய்வம் பெண்ணணங் காய்க்கூறு. கஙு

மல்லல் வளமும் வலியுமாங் கல்லுடன்
வில்லுஞ் சிலையாய் விளம்புவர்—செல்லும்
தல மாதிரங் கதிரோ னருந்தரணி
குலமாகு மில்லங் குடி. கச

வாம மழகுங் குறளோடிட மொளி
தாமமலங்க லுட லொழுங்கா—மேமம்
பரவிரவின்பம் பயோதரங் கார்கொங்கை
அரவமொலி நாகமாம். கரு

அம்பர மாகாய மாடை கடலாகும்
கொம்பு கரை பணிலங் கோடெண்ப—ரம்பு
பறவை ககமே பரண்கீவல் பேயோ
டுறுபதமுங் கழுதேயாம். கசு

தட்டை என்பது கீசகம், (மூங்கில்) தத்தை (கிளி) கடி கருவி.
சினை என்பது முட்டை, உறுப்பு, மரக்கொம்பு.
பட்டம் என்பது மடு, சீலை, வழி, கவரிமாமிருகம், ஆயுதம்.
வல் என்பது சூது.
மாலை என்பது நோய், (காமாலை) மாலை.
உளை என்பது புரவிமயிர், (குதிரைமயிர்) கூந்தல், ஓசை.
அளை என்பது இடம், மோர்.
பிளிறல் என்பது அழுங்கல்.
இழை என்பது அணிகலன், (ஆபரணம்) நூல்.
குழை என்பது சேறு, குண்டலம், (காதணி)
தனபதி என்பது சோமன், (சந்திரன்) குபேரன்.
வனம் என்பது அழகு, காடு, துளசி.
அணங்கு என்பது நலம், (அழகு) ஆசை, அச்சம், நோய், தெய்வம், வருத்தம், கொலை, தெய்வப்பெண்.
மல்லல் என்பது வளம், (வளமை) வலி.
சிலை என்பது வில்.
தரணி என்பது தலம், (பூமி) மாதிரம், (திக்கு) கதிரோன், (சூரியன்)
குலம் என்பது இல்லம், (வீடு) குடி.
வாமம் என்பது அழகு, குறள், இடம், (இடதுபக்கம்) ஒளி.
தாமம் என்பது அலங்கல், (மாலை) உடல், ஒழுங்கு.
எமம் என்பது இரவு, இன்பம்.
பயோதரம் என்பது கார், (முகில்) கொங்கை, (முலை)
அரவம் என்பது ஒலி, நாகம்.
அம்பரம் என்பது ஆகாயம், ஆடை, (சீலை) கடல்.
கோடு என்பது கொம்பு, (மரக்கொம்பு) கரை, பணிலம், (சங்கு)
ககம் என்பது அம்பு, பறவை.
கழுது என்பது பரண், காவல், பேய், அறுபதம், (வண்டு)

அத்தி யத வானை யார்கலி யென்பாகும்
கொத்தாத்தி சாந்தங் குளிர்மாலை--முத் தாரம்
பூ மரம் போச்சை யுகிர் நகம் புண்டரிகம்
தாமரை சார்த்தூலமாம். கஎ

வச்சிரமாகும் வயிரங் குலிச மிவை
கச்சு நவம் வம்பு காமரே--ரிச்சையாம்
மெத்து தடை சங்கு மெய்க்கவசங் கோழியுடன்
அத்தி கடல் வாரணமே யாம். கஅ

தான மிடங் கோடை சாரும் வலிமையுடன்
யானைமதங் தேவலோகமாம்—மான் வண்டு
சாரங்கம் வையஞ் சதியும் பெருந்தேரும்
பாருங் கை நீர்பாணியாம். ககூ

இரவி யருக்கன் பருப்பதமாமென்பர்
பரவ வுதித்தல் விளம்பல்--பரத்தலே
முட்டுருளை சக்கர மூங்கில் வரை திகிரி
தட்டம் முறம் வட்டங் தவறு. உ0

சலமுதிர்கோபஞ் சலனம் சலம் புவனம்
நில முதகங் தக்கணம் தெற்கு—வலமாம்
கவி கவிதை வானர மென்றுரைப்பர் காவே
புவியென்றிவையாம் பொழில். உக

ஆனைத்துதிக்கை முனி குரு கோர்தீவம்
வானங் கமலம் வசிபாணி—மாதீர்த்தம்
புட்கர மேஃகாகுங் கூர்மை வேல் வாள் சுரிகை
மூட்கண்டகமாய் மொழி. உஉ

அத்தி எ—து அதவு, (அத்திமரம்) ஆனை, ஆர்கலி, (சமுத்திரம்) என்பு.
ஆரம் எ—து ஆத்தி, சாந்தம், (சந்தனமரம்) மாலை, முத்து.
நகம் எ—து பூ, (பூமி) மரம், பொச்சை, (மலை) உகிர், (நகம்)
புண்டரிகம் எ—து தாமரை, சார்த்தூலம், (புலி)
வச்சிரம் எ—து வயிரம், (ஓர் இரத்தினம்) குலிசம், (வச்சிராயுதம்)
வம்பு எ—து கச்சு, நவம், (புதுமை)
காமர் எ—து ஏர், (அழகு) இச்சை.
வாரணம் எ—து தடை, சங்கு, கவசம், கோழி, அத்தி, (யானை) கடல்.
தானம் எ—து இடம், கொடை, வலிமை, யானைமதம், தேவலோகம்.
சாரங்கம் எ—து மான், வண்டு.
வையம் எ—து சதி, (உரோகணி) தேர், பார், (பூமி)
பாணி எ—து கை, நீர்.
இரவி எ—து அருக்கன், (சூரியன்) பருப்பதம், (மலை)
பரிவல் எ—து துதித்தல், விளம்பல், (சொல்லல்) பரத்தல்.
திகிரி எ—து உருளை, சக்கரம், மூங்கில், வரை, (மலை)
தட்டு எ—து புறம், (சுளகு) வட்டம், தவறு.
சலம் எ—து முதிர்கோபம், சலனம், (அசைவு) சலம்.
புவனம் எ—து நிலம், உதகம், (நீர்)
தக்கணம் எ—து தெற்கு, வலம், (வலப்பக்கம்)
கவி எ—து கவிதை, (பா) வானரம், (குரங்கு)
பொழில் எ—து கா, புவி, (பூமி)
புட்கரம் எ—து ஆனைத்துதிக்கைநுனி, குருகு, ஓர்தீபம், (புட்கரதீவு) வானம், கமலம், (தாமரை) வசி, (வாள்) பாணி, (நீர்) தீர்த்தம்.
எஃகு எ—து கூர்மை, வேல்.
கண்டகம் எ—து வாள், சுரிகை, முள்.



உததி நதி சிந்து மரக்கலமுந் தூணும்
மதலை யிருந்துவசம் வாழை--கதலி
பொறியார்குஞ் செல்வ மறிவுந் திருவும்
வெறியாகும் பாசம் விரை. உரு

கருமை வலி பெருமை கன்னல் கடிகை
கரகந் திமிர யிருளு—நரகும்
ஒழிதலே நீத்தலுஞ் சாதலு மாமென்பர்
அழகு பெருமை தகையாம். உச

குற்றங் குறி களங்க மங்கணமாஞ் சேறு
முற்ற மாசாகுஞ் சிறுமையுங்—குற்றமும்
மாக்கடலுங் கரையும் வேலை வாள்கூர்மை யொளி
யாக்கை திரள் பிண்டமெனலாம். உரு

குளமாஞ் சருக்கரை குட்டமொடு நெற்றி
களங் களம் போர்க்களங் கண்டம்--களத்திரம்
குடங் கரி மத்தகம் கும்பமா மென்பர்
தடங்கொங்கை வித்தந் தனம். உசா

வாரங் கருணை கரை பங்கு பச்சிலையும்
ஊருமாங் தண்ணடை நாகணப்புட்—காரிகை
காயாமரமிவை பூவை சிகி கேது
தீ யொடு மஞ்ஞை தெளி. உஎ

போகி கவி மங்குல் புன்னை மலை மேலுலகம்
வேகமுறுந் தந்தி வியன்றுகி—ஞகமாம்
துப்பு பவளந் துணை நெய்யாந் தாமரை
அப்பு கமல மெனலாம். உஅ

அருத்தமே பாதி தீனமும் பயனும்
கருத்தும் பவித்திரந் தூய்மை—தருப்பை
இரு ளந்தகார நரகங் கறுப்பே
அரசு மன் பிப்பிலமேயாம். உகூ

சிந்து எ—து உததி, (கடல்) நதி.
மதலை எ—து மரக்கலம், தூண்.
கதலி எ—து துவசம், (துகிற்கொடி) வாழை.
பொறி எ—து செல்வம், அறிவு, திரு, (இலக்குமி)
வெறி எ—து பாசம், (பிசாசம,) விரை, (வாசனை)
கருமை எ—து வலி, பெருமை.
கன்னல் எ—து கடிகை, (நாழிகை) கரகம்.
திமிரம் எ—து இருள், நரகு.
ஒழிதல் எ—து நீத்தல், சாதல்.
தகை எ—து அழகு, பெருமை.
களங்கம் எ—து குற்றம், குறி, (அடையாளம்)
அங்கணம் எ—து சேறு, முற்றம்.
ஆசு எ—து சிறுமை, குற்றம்.
வேலை எ—து கடல், கரை.
வாள் எ—து கூர்மை, ஒளி.
பிண்டம் எ—து யாக்கை, திரள்.
குளம் எ—து சருக்கரை, குட்டம், (குளம்) நெற்றி
களம் எ—து களம், (களர்) போர்க்களம், கண்டம், (கழுத்து) களத்திரம், (மனைவி)
கும்பம் எ—து குடம், கரிமத்தகம், (யானைமத்தகம்)
தனம் எ—து கொங்கை, (முலை) வித்தம், (செல்வம்)
வாரம் எ—து கருணை, கரை, பங்கு.
தண்ணடை எ—து பச்சிலை, ஊர்.
பூவை எ—து நாகணவாய்ப்புள், காரிகை, காயாமரம்.
சிகி எ—து சேது, தீ, மஞ்ஞை, (மயில்)
நாகம் எ—து போகி, (பாம்பு) கவி, (குரங்கு) புன்னை, மலை, மேலுலகம், தந்தி, (யானை) துகில், (சீலை)
துப்பு எ—து பவளம், துணை, நெய்.
கமலம் எ—து தாமரை, அப்பு, (நீர்)
அருத்தம் எ—து பதி, தனம், (செல்வம்) பயன், கருத்து.
பவித்திரம் எ—து தூய்மை, தருப்பை.
இருள் எ—து அந்தகாரம், நரகம், கறுப்பு.
அரசு எ—து மன், (இராசன்) பிப்பிலம், (அரசமரம்)

முடலை திரட்சி முருகு வலியாம்
பிடர் முதுகு மேடு சுவலே--தடம்பாடி
தானைநகர் நாடு தயிர்கடை தூணணில்
யானைத்தறி வெளிலேயாம். ௩௦

மருதநிலங் கழனி வாவியுடன் பொய்தல்
வருபட்டம் பண்ணைப் பெயராங்—கருவி
தொடர்பு படை கவசஞ் சூழ்கொண்டலீட்டம்
நடலை பொய் வஞ்சனையுமாம். ௩௧

ஞான மறிவு பனுவலுமாமென்பர்
கான மணங் கீதங் காடாகும் —வான்சேர்
மறை மந்திரம் வேத மாவாம் புரவி
சிறைவண்டு சூதந் திரு. ௩௨

மாடமுழுந் தில்ல மழையே குளிர்ச்சி புயல்
கூடமறைவு கொல்லன்சம்மட்டி—சேடன்
புவிதாங்கரவ மினையோன் ஏலுவன்
கவனஞ் சடுதி கதி. ௩௩

சீதை பொன்னுங்காணி படைச்சா லரிதேவி
மேதை புதனிறைச்சி வீழ்கள்ளு—கோதையே
தோற்கட்டுச் சேர னதி மாலை காற் றேழுங்கு
ஆற்றல் பொறை முயற்சியாம். ௩௪

பகவன் சிவன் மாயன் பங்கயன் புத்தன்
பகனுண் முகூர்த்தம் பகலோன்--நகரமே
பூந்தா தொருமீன் புகலீ சொல் குதிர் வெற்றி
வேந்தன் வியாழ னிறை. ௩௫

முடலை எ—து திரட்சி, முருகு, (நாற்றம்) வலி.
சுவல் எ—து பிடர், முதுகு, மேடு.
பாடி எ—து தானை, (படை) நகர், நாடு.
வெளில் எ—து தயிர்கடைதூண், அணில், யானைத்தறி.
பண்ணை எ—து மருதநிலம், கழனி, (வயல்) வாவி, பொய்தல், (மகளிர்விளையாட்டு) பட்டம், (குளம்)
கருவி எ—து தொடர்பு, படை, கவசம், கொண்டல், (மேகம்) ஈட்டம், (கூட்டம்)
நடலை எ—து பொய், வஞ்சனை.
ஞானம் எ—து அறிவு, பனுவல், (கல்வி)
கானம் எ—து மணம், கீதம், காடு..
மறை எ—து மந்திரம், வேதம்.
யா எ—து புரவி, (குதிரை) வண்டு, சூதம், (மாமரம்) திரு. (இலக்குமி)
மாடம் எ—து உழுந்து, இல்லம்.
மழை எ—து குளிர்ச்சி, புயல்.
கூடம் எ—து மறைவு, கொல்லன்சம்மட்டி.
சேடன் எ—து புவிதாங்கரவம், (ஆதிசேடன்) இளையோன், ஞெலுவன், (தோழன்)
கவனம் எ—து சடுதி, கதி.
சீதை எ—து பொன்னுங்காணி, படைச்சால், அரிதேவி, (சீதை)
மேதை எ—து புதன், இறைச்சி, கள்.
கோதை எ—து தோற்கட்டு, சேரன், நதி, மாலை, காற்று, ஒழுங்கு.
ஆற்றல் எ—து பொறை, முயற்சி.
பகவன் எ—து சிவன், மாயன், (விஷ்ணு) பங்கயன், (பிரமா) புத்தன்.
பகல் எ—து நாள், முகுர்த்தம், பகலோன், (சூரியன்)
மகரம் எ—து பூந்தாது, ஒருமீன்.
புகல் எ—து சொல், குதிர், வெற்றி.
வேந்தன் எ—து வியாழன், இறை, (இராசன்)

அய ஙிக வது. ஒருபொருட் பலபெயர்த்தொகுதி.

சிகரி யெலி கோபுர நாரை சிலம்பு
மகம் யாக மோர்நாள் வசி வாண்—மிகுகூர்மை
திங்கள் பிறை மாதஞ் சிக்கங் குடுமி யுறி
தங்கு சிறை சீப்புந் தகும். ளகசு

சங்கங் கணைக்கால் சவை சங்கு நெற்றி யெண்
பங்கு முடம் பாதி பகர் சனியாம்--வங்கமே
ஈயமோடு வெள்ளி வழுதலை நாவாயாம்
நேயமே நெய் யன்பு நேர். ளஎ

தூங்கலே யானை நிருத்தந் துயில் சோம்பு
வேங்கை யடும்புலி போன் வேல் பக்க--ஞாங்கர்
கோக்காகு மூலங் குதிரையுடன் சூதம்
பக்கந் திதி யருகுபார். ள அ

மாரி பிணி கள்ளு வடுகி புயன் மழை
காரி சனி வடுகன் காளஞ் சீ—ராரியன்
பத்திரி வாசி சரம் பறவை காளி யிலை
அத்திரி தாசோக மம்பு. ளகூ

படி யுலகு கச்சம் பரிசு பகை நாழி
வெடி வெருவல் குய்யே வெளியு—மிடியும்
நகை யின்ப முர லொளி பூ ணரும்பு
மிகு சிரிப்பினோ டிகழ்ச்சியாம். ச0

மான மள விலச்சை மான மரில் பெருமை
பானலே காவி பழனமா--மானபோ
துஞ்ச னிலைபெறு துயில்சோம்பு சாவுமாம்
அஞ்சலே தோல்வி பயம். சக

சிகரி எ—து எலி, கோபுரம், நரை, சிலம்பு, (மலை)
மகம் எ—து யாகம், ஓர்நாள்.
வசி எ—து வாள், கூர்மை.
திங்கள் எ—து பிறை, மாதம்.
சிக்கம் எ—து குடுமி, உறி, சிறை, சீப்பு.

சங்கம் எ—து கணைக்கால், சவை, சங்கு, நெற்றி, எண்.
பங்கு எ—து முடம், பாதி, சனி.
வங்கம் எ—து ஈயம், வெள்ளி, வழுதலை, நாவாய்.
நேயம் எ—து நெய், அன்பு.

தூங்கல் எ—து யானை, நிருத்தம், துயில், சோம்பு.
வேங்கை எ—து புலி, பொன்.
ஞாங்கர் எ—து வேல், பக்கம்.
கொக்கு எ—து மூலம், (நாள்) குதிரை, சூதம், (மா)
பக்கம் எ—து திதி, அருகு.

மாரி எ—து பிணி, கள், வடுகி, புயல், மழை.
காரி எ—து சனி, வடுகன், (வைரவன்) காளம், ஆரிய ன், (ஐயன்)
பத்திரி எ—து வாசி, (குதிரை) சரம், (அம்பு) பறவை, காளி, இலை.
அத்திரி எ—து தாசோகம், (கழுதை) அம்பு.

படி எ—து உலகு, கச்சம், (குதிரையங்கவடி) பரிசு, (குணம்) பகை, நாழி.
வெடி எ—து வெருவல், குய், (நறும்புகை) வெளி, இடி.
நகை எ—து இன்பம், மூரல், (பல்) ஒளி, பூண், அரு ம்பு, சிரிப்பு, இகழ்ச்சி.

மானம் எ—து அளவு, இலச்சை, மானம், அரில், (குற் றம்) பெருமை.
பானல் எ—து காவி, (கருங்குவளை) பழனம், (வயல்)
துஞ்சல் எ—து நிலைபெறு, துயில், சோம்பு, சாவு.
அஞ்சல் எ—து தோல்வி, பயம்.

அஉ யிகவது. ஒருபொருட் பலபெயர்த்தொகுதி.

பெருநாரை யீசன் பிரமன் பிதாவே
அருகன் சிவ னிகலன் சம்பு--குருவாங் கேழ்
நன்மை தருமாசான் கனமொருநோ யோர்மன்
பொன் னே ரிரும் பருக்கன் பூ. சஉ

எருது நல்லாடை எறிபடை கைவேல்
முர சியங் தூரியமாமென்பர்—கருதிற் கள்
விள்ளுமது களவாம் விரிவடவை யூழித்தீ
கொள்ளும் பிடி மயிடங் கூறு. சரு

வீறு பெருஞ்சீத்தியுடன் வெண்ணீறு நன்செல்வம்
வேருங் கொடுமை விபூதியாம்--தாறென்ப
வில்லின்குதையு மரக்குலையு மெல்லையுமாஞ்
சொல்லுரையு நெல்லுந் துணி. சசு

வியனுலகம் பூமி வியோம முயரந்தோர்
உயருங் கனநாடு திக்கே உலகு
சரணமடைபுகல் தாள் கரணங் கூத்துப்
பெருங் கல்வி யைம்பொறியின் பேர். சடு

உரமே வலி ஞான மூக்க மகலஞ்
சிரமே நெடுங்காலஞ் சென்னி--புரமே
நகருமுடலு நளிர் குளிர் ஞெண்டு
பகை வெறுப்பாகும் பகர். சசு

கந் தலை வாயு பிரமன் சலம் வெண்மை
புந்தி புதன் புத்தி புள்பக்கி—வண்டாகும்
தீயபகை துப்பு தூ தில்லம் படைக்கலநீர்
சாயகங் காண்டமெனச்சாற்று. ருஎ

பிதா எ—து பெருநாரை, ஈசன், பிரமன்.
சம்பு எ—து அருகன், சிவன், இசலன், (நரி)
குரு எ—து கேழ் (நிறம்) ஆசான், கனம், ஒருநோய், ஒருமன், (ஓரிராசன்)
பொன் எ—து வர், இரும்பு, அருக்கன், (சூரியன்) பூ, (பொலிவு)

தூரியம் எ—து எருது, நல்லாடை (சீலை) எறிபடை, கைவேல், முரசு, பறை.
கள் எ—து மது, களவு.
வடவை எ—து ஊழித்தீ, பிடி, (பெண்யானை) மயிடம், (எருமை)

விபூதி எ—து வீறு, (பெருமை) சித்தி, வெண்ணீறு, செல்வம், கொடுமை.
தாறு எ—து விற்குதை, மரக்குலை, எல்லை.
சொல் எ—து உரை, நெல்.

உலகம் எ—து பூமி, வியோமம், (ஆகாயம்) உயர்ந்தோர்.
உலகு எ—து கனம், (ஆகாயம்) நாடு, திக்கு.
சரணம் எ—து அடைபுகல், தாள், (கால்)
கரணம் எ—து கூத்து, கல்வி, ஐம்பொறி.

உரம் எ—து வலி, ஞானம், ஊக்கம், அகலம், (மார்பு)
சிரம் எ—து நெடுங்காலம், சென்னி.
புரம் எ—து நகர், உடல்.
நளிர் எ—து குளிர், ஞெண்டு.
பகை எ—து வெறுப்பு.

கம் எ—து தலை, வாயு, பிரமன், சலம், வெண்மை.
புந்தி எ—து புதன், புத்தி.
புள் எ—து பக்கி, (பட்சி) வண்டு.
தூ எ—து பலுக்க், துப்பு, (பற்றுக்கோடு)
காண்டம் எ—து தில்லம், (காடு,) படைக்கலம், நீர், சாயகம், (அம்பு)

அஙசு மிக வது. ஒருபொருட்பலபெயர்த்தொகுதி.

சொலும்பச்சை பன்னம் பலாசாந் திகழ்பா
டலஞ் சிவப்பு பாதிரியுமாகு--நலஞ்சேர்
மருதும் வெளுப்பு மருச்சுனமாகும்
அருணஞ் சிவுப்பு மாறும். சஙு

காய முடன் மாகம் பெருங்காய நெய்சுரிப்பு
ஆயமே மாதர் சபையுட--ஞதாயம்
பயிரே பறவையிசை நெற்பயிர் பைங்கூழ்
வயலே வெளி பழனமாம். சகூ

உப்பே யினிமை உவர்கடலும் வண்டலுஞ்
செப்பு நடுவுந் தெரு நெஞ்சும்-செப்பமே
இச்சையே பொய்த்த லிடித்தலோ டஞ்ஞானம்
அச்ச மகத்தி யஞ்சலாம். ருo

கடவு டே நன்மை கடம்புரங் காடு
குடங் கயிறு தந்திதன்கூட்ட--மடலே
பனையேடு பூவினித ழொருசெய்யுண்
மனை வீடு காதலியுமாம். ருக

நந்தியாவர்த்தமுட னந்து வலம்புரி
மந்திரமாங் கோயின் மறை வாசிப்--பந்தியே
துண்டஞ் சாரைப்பாம்பு துணி வதன முக்காகும்
அண்ட மாகாய முட்டையாம். ருஉ

இறை யரச னூழித்தீ யிறகு கடன் சிறுமை
இறையென்னுமேவ லுயர்ச்சி--குடியிறையே [ன்
பிரமன் சிவன் மூத்தோன் பெருமை வருத்தமுட
வருவீட்டிறப்பெனவே வைத்து. ருங

பலாசு எ—து பச்சை, பன்னம், (இலை)
பாடலம் எ—து சிவப்பு, பாதிரி.
அருச்சுனம் எ—து மருது, வெளுப்பு, (வெண்மை)
அருணம் எ—து சிவப்பு, மான்.

காயம் எ—து உடல், மாகம் (ஆகாயம்) பெருங்காயம், நெய், கரிப்பு.
ஆயம் எ—து மாதர்சபை, ஆதாயம்.
பயிர் எ—து பறவையிசை, (பறவைக்குரல்) நெற்பயிர், பைங்கூழ்.
வயல் எ—து வெளி, பழனம்.

உப்பு எ—து இனிமை, உவர், உப்பு, கடல், வண்டல், (மகளிர்விளையாட்டு)
செப்பம் எ—து நடுவு, தெரு, நெஞ்சு.
இச்சை எ—து பொய்த்தல், இடித்தல், அஞ்ஞானம்.
அச்சம் எ—து அகத்தி, அஞ்சல்.

கடவுள் எ—து தே, (தெய்வம்) நன்மை.
கடம் எ—து புரம், (உடல்) காடு, குடம், கயிறு, தந்திக்கூட்டம்.
மடல் எ—து பனையேடு, பூவினிதழ், ஒருசெய்யுள்.
மனை எ—து வீடு, காதலி.

வலம்புரி எ—து நந்தியாவர்த்தம், நந்து, (சங்கு)
மந்திரம் எ—து கோயில், மறை, வாசிப்பந்தி.
துண்டம் எ—து சாரைப்பாம்பு, துணி, வதனம், (முகம்) மூக்கு.
அண்டம் எ—து ஆகாயம், முட்டை.

இறை எ—து அரசன், ஊழித்தீ, இறகு, கடன், சிறுமை, இறையென்னேவல், உயர்ச்சி, குடியிறை, பிரமன், சிவன், மூத்தோன், பெருமை, வருத்தம், வீட்டிறப்பு.

அசு யிக வது. ஒருபொருட்பலபெயர்த்தொகுதி.

வெள்ளை வெண்பா வெள்ளாடு சங்கு பலதேவன்
வெள்ளி தவளம்-விளு சொல்லே--நள்ளோணம்
உச்சிப்பொழுது நடுவோதனமுண்டி
எச்ச மகன் யூாக மிசை. ருச

விடல் குற்றஞ் சாதல் விடுதல் விபரீதம் [ளே
தொடுவியப்பு வேற்றுமையாய்ச் சொல்வர்-படுகள்
ஆனகந் தம்பட்டந் துந்துமி தேவதரு
வானம் மழை வாளுய் வாழ்த்து. ருரு

ஈழம் பொன் சிங்களங் கள் ளிலங்கை
பாழி குகை சயனம் பாழியே—நாழி
புரட்டை புழை நாழி புணை தெப்ப மூங்கில்
இரட்டை மிதுன மிரட்டி. ருசு

செச்சை வனங் கோச்சை சேதாரமாகும்
சிச்சிலி யோர்புள்ளே சிதைகீழ்மை—முச்சில் மு
றம்
பாடி கவசம் படைநகரம் பாடியே
பாடந் தெரு பாடமாம். ருஎ

பாசு வேய் பச்சை பனிச்சை மயிர்ச்சுருளாம்
பேசுநரி யிகலன் பேட்பாசை-கோசிகமே
சீலை மூன்றும் வேதஞ் செம்மணி மாணிக்கம்
சாலேய நெல்விளை தானம். ருஅ

வெள்ளை எ—து வெண்பா, வெள்ளாடு, சங்கு, பலதேவன்.
வெள்ளி எ—து தவளம், (வெண்மை.)
விஞ எ—து சொல்.
நள் எ—து ஓணம்.(திருவோணம்)உச்சிப்பொழுது,நடு.
ஓதனம் எ—து உண்டி.
எச்சம் எ—து மகன், யாகம்.
விடல் எ—து குற்றம், காதல், விடுதல்.
விபரீதம் எ—து வியப்பு, வேற்றுமை.
படு எ—து கள்.
ஆனகம் எ—து தம்பட்டம், துந்துமி, தேவதரு.
வானம் எ—து மழை, வான்.
ஈழம் எ—து பொன், சிங்களம், கள், இலங்கை.
பாழி எ—து குகை, சயனம், பாழி.
நாழி எ—து புரட்டை, (பூரட்டாதி) புழை,(உட்டுளை) நாழி.
புணை எ—து தெப்பம், மூங்கில்.
இரட்டை எ—து மிதுனராசி) இரட்டி.
செச்சை எ—து வனம், கொச்சை, (வெள்ளாட்டுக்கடா) சேதாரம், (வெட்சி)
சிச்சிலி எ—து ஓர்புள்.
சிதை எ—து கீழ்மை.
முச்சில் எ—து முறம், (சுளகு)
பாடி எ—து கவசம், படை, நகரம், பாடி.
பாடம் எ—து தெரு, பாடம்.
பாசு எ—து வேய், (மூங்கில்) பச்சை.
பனிச்சை எ—து மயிர்ச்சுருள்.
இகலன் எ—து நரி.
பெட்பு எ—து ஆசை.
கோசிகம் எ—து சீலை, மூன்றும்வேதம்.
செம்மணி எ—து மாணிக்கம்.
சாலேயம் எ—து நெல்விளைதானம்.

அஅ ம்ஊ வது. பலபொருட்கூட்டத்தொருபெயர்த்தொகுதி.

ஆட லசைதல் குழித்த லடல் செய்தல்
வாடன் மெலிதன் மரித்த லணை—தேடரிய
மெத்தை வரம்பு விரதந் தவ மாணை
கத்தை கழுதையுடன் கத்து. ருகூ

கற்ரு ரறிஞர் களை யயர்வு குற்றம்
பெற்ரு ரனை தந்தை பே டலி யூர்-சுற்று மதில்
சூதவம் வண்டு சுளிவு சினஞ் சோபனமே
ஓதுசுபம் வாழத் தழகாயோது. சுo

வாணி சொன் ளுமகளே மத்திரிப்புக் கோபமே
தூணி யம்புக்கூடு சோற்கேளவை-பேளுலி கள்
ஆயிலியந் துன்ப மரில் குற்றமா முனைதான்
தேயு நெருப் பதள் தோல் செப்பு. சுக

ம்க. ராவது ஒருபொருட்பலபெயர்த்தொகுதிமுற்றும்.
பதிளுருதொகுதிக்குங் கூடியவெண்பா, உாசுக.

---

## பன்னிரண்டாவது.

பலபொருட்கூட்டத்தொருபெயர்த்தொகுதி.

கூறியது கூறுகினுங் குற்றமிலை நற்பொருடான்
வேறுபெறினென்றேவிதித்தலால்--வேறுரைகேள்
ஏகமே வீடு மறுமையோ டிம்மையென்
ருகுமிருமையறி. க

இருசுடர் சூரியன் சந்திரனேயாகும் [தோற்றம்
பொரு வெச்சமாமிரண்டே வினை பெயரா—மிரு
சர மசரமாமிரண்டு சார்பொருளே கல்வி செல்வம்
மரபிரண்டே தாய் தந்தையாம். உ

ஆடல் எ—து அசைதல், குழித்தல், அடல், (பொருதல்) செய்தல்.
வாடல் எ—து மெலிதல், மரித்தல்.
அணை எ—து மெத்தை, வரம்பு.
விரதம் எ—து தவம், ஆணை.
கத்தை எ—து கழுதை, கத்து என்னும் ஏவல்.
கற்ருர் எ—து அறிஞர்.
களே எ—து அயர்வு, குற்றம்.
பெற்ருர் எ—து அன்னே, தந்தைஎனுமிருகுரவர்.
பேடு எ—து அலி, ஊர்.
சுற்று எ—து மதில்.
சூதவம் எ—து வண்டு.
சுளிவு எ—து சினம்.
சோபனம் எ—து சுபம், வாழ்த்து, அழகு.
வாணி எ—து சொல், நாமகள், (சரஸ்வதி)
மத்திரிப்பு எ—து கோபம்.
தூணி எ—து அம்புக்கூடு.
கௌவை எ—து ஒலி, கள், ஆயிலியம், துன்பம்.
அரில் எ—து குற்றம், முனே, (பகை)
தேயு. எ—து நெருப்பு.
அதள் எ—து தோல்.

---

## பெயர்ப்பிரிவு.

பலபொருட்கூட்டத்தொருபெயர்த்தொகுதி.

ஏகம் எ—து வீடு, (மோட்சம்)
இருமையாவன—இம்மை, மறுமை.
இருசுடராவன—சூரியன், சந்திரன்.
ஈரெச்சமாவன—வினையெச்சம், பெயரெச்சம்.
இருவகைத்தோற்றமாவன—சரம், அசரம்.
இருபொருளாவன—கல்வி, செல்வம்.
இருமரபாவன—தாய், தந்தை.

முன்னிலை தன்மை படர்க்கையிவை மூன்றிடம்
பன்னு சிவன் மாயன் பங்கயனே—மும்மூர்த்தி
காலமொரு மூன்றாங் கருதுமிறப்புடனே
சாலுநிகழ் வெதிர்வுந்தான். ௩

இராசதஞ் சாத்துவிதந் தாமத மாமென்று
விராவுகுணமூன்றகு மெய்க்காம-முரை வெகுளி
சொன் மயக்க முக்குற்றஞ் சூரியனுஞ் சந்திரனும்
முன்னெரியு முச்சுடர்களாம். ௪

இய லிசை நாடகமா முத்தமிழென்றேதும் [னே
அயர்வில் சிருட்டித்தலுடன் வீய்த்தல்—இயலுட
காத்தலிவை மூத்தொழிலாங் கருதுமுதனூல் வழி
நூல்
ஆக்கு புடைநூல் மூந்நூலாம். ரு

வாதமுடன் பித்தம் வருசேட முப்பிணியே
ஓது தனவைசியர் பூவைசியர்—தீதிலாக்
கோவைசியர் மூன்றும் வைசியர் மனம் வாக்கு
காயம் பொறி மூன்றுங் காண். சா

ஆசு மதுரமே சித்திர நல்வித்தாரம்
ஏசில் கவி நான்கென் றியம்புவார்—பேசும்
அறம் பொரு ளின்பம் வீடா மிவைகணான்குந்
திறம்பாதநூற் பொருளாய்த் தேறு. எ

சாலோகஞ் சாமீபஞ் சாரூபஞ் சாயுச்சியமீ
நாலாம் பதவியெனநவில்வார்—மேலான
தேர் கரி மா காலா டிகழங்க நாலென நல்
லோரிசைத்தார் முன்னூலிலோர்ந்து. அ

பெயரும் வினையு மிடையு முரியும் (யே
இயலுஞ்சொ னான்கேயெனலாஞ்—சேய வணி
உண்டையொடோட்டு யூகம் படை வகுப்பு
கொண்டதொருநான்காய்க்கூறி. க0

மூன்றிடமாவன—முன்னிலை, தன்மை, படர்க்கை.
மும்மூர்த்தியாவார்—சிவன், மாயன், (விஷ்ணு) பங்கயன், (பிரமன்)
முக்காலமாவன—இறப்பு, நிகழ்வு, எதிர்வு.

முக்குணமாவன—இராசதம், சாத்துவிதம், தாமதம்.
முக்குற்றமாவன—காமம், வெகுளி, மயக்கம்.
முச்சுடராவன—சூரியன், சந்திரன், எரி, (அக்கினி)

முத்தமிழாவன—இயல், இசை, நாடகம்.
முத்தொழிலாவன—சிருட்டித்தல், வீய்த்தல், காத்தல்.
முந்நூலாவன—முதனூல், வழிநூல், புடைநூல், (சார்பு நூல்)

முப்பிணியாவன—வாதம், பித்தம், சேடம்.
மூவைசியர்—தனவைசியர், பூவைசியர், கோவைசியர்.
முப்பொறி—மனம், வாக்கு, காயம்.

நாற்கவியாவன—ஆசு, மதுரம், சித்திரம், வித்தாரம்.
நாற்பொருள்நான்காவன—அறம், பொருள், இன்பம், வீடு.

நாற்பதவியாவன—சாலோகம், சாமீபம், சாரூபம், சாயுச்சியம்.
நாலங்கமாவன—தேர், கரி, (யானை) மா, (குதிரை) காலாள்.

நாற்சொல்லாவன—பெயர், வினை. இடை, உரி.
நான்குபடைவகுப்பாவன—அணி, உண்டை, ஒட்டு, யூகம்.

அறியான்வினவ லறிவொப்புக்காண்டல்
குறியினையந்தீர்த்தல் குறித்தோ—னறிவுகொளான்
மெய்யவற்குக்காட்டல் வினவி லரியவினு
ஐவகையாமென்றேயறி. கக
வரிசிலை சங்காழி வாள் கதை யிவ்வைந்தும்
அரிதன் படைக்கலமென்ருகு—மரன் முகமே
தற்புருட மீசானஞ் சத்தியோசாதம் வாமம்
விற்சே ரகோரம்விரி. கஉ
கன்னல் சிறுபயறு கதலியுடன் செவ்விளநீர்
சென்னெலிவை நாட்டிற்றிரவியமா—மன்னனுட
ன்
கண்ணுடி பித்தன் கருங்குரங்கு தந்தி யைந்தும்
திண்ண நகர்ப்பொருளாய்ச்செப்பு. கங
நாவி மயிற்பீலி நறுந்தே னரக்கோ டிருல்
கானின் றிரவியமாய்க்கட்டுரைப்பர்—மேவியுறும்
உப்பு தரள முயர் சங்குடன் கவடி
துப்புங்கடற்பொருளாய்ச்சொல். கச
பாலன் குமரன் பகரரசன் மூப்புடன் சா (ற்
கோலும்பேர்முன்னெழுத்துக்கொண்டாதி—சாலி
கவிதனக்குமுன்மூன்று மின்பங்கடையிரண்டு
நவையாகுமென்றேநவில். கரு
சந்தனங் கர்ப்பூரந் தாவிலெரிகா சேலம்
வந்ததேனோ டகிலின்கூட்டா—மைந்தும்
காம மிராகஞ் சடந் தீபனங் கோபம்
வேமங்கியைந்தாய் விதி. கசு
திதி வார நாள் கரணஞ் சேர்யோக மென்றும்
விதியாருமைந்தங்கஞ் சேஞ்--பதிமறையோர்.
மந்திரி தூதர் வருசாரண ரிவைதாம்
ஐந்து மரசர்க்குழுவாம். கஎ



ஐவகைவினுவாவன—அறியான்வினவல், அறிவொப்புக்காண்டல், ஐயந்தீர்த்தல், குறித்தோனறிவுகொளல், மெய்யவற்குக்காட்டல்.

அரியினுயுதமைந்தாவன—சிலை, சங்கு, ஆழி, வாள், கதை.

அரன்முகமைந்தாவன—தற்புருடம், ஈசானம், சத்தியோசாதம், வாமம், அகோரம்.

நாடுபடுதிரவியமைந்தாவன—கன்னல், (கரும்பு) சிறுபயறு, கதலி, (வாழை) செவ்விளநீர், நெல்லு.

நகர்படுதிரவியமைந்தாவன—மன்னன், கண்ணடி, பித்தன், கருங்குரங்கு, தந்தி, (யானை)

கான்படுதிரவியமைந்தாவன—நாவி, மயிற்பீலி, தேன், அரக்கு, இருல்.

கடல்படுதிரவியமைந்தாவன—உப்பு, தரளம், (முத்து) சங்கு, கவடி, துப்பு, (பவழம்)

எழுத்துத்தானமைந்தாவன—பாலன், குமரன், அரசன், மூப்பு, சா.

அகிற்கூட்டைந்தாவன—சந்தனம், கர்ப்பூரம், எரிகாசு, எலம், தேன்.

அக்கினியைந்தாவன—காமம், இராகம், சடம், தீபனம், கோபம்.

ஐந்தங்கமாவன—திதி, வாரம், நாள், கரணம், யோகம்.

அரசர்குழுவைந்தாவன—சேனுபதி, மறையோர், மந்திரி, தூதர், சாரணர்.

எண்ண லெழுத லிலைகிள்ளல் பூத்தொடுத்தல் [ம்
பண்வீணைவாசித்தல் பஞ்சதொழில்-எண்கைக்கா
பாலை குறிஞ்சி மருதமுட னெய்தல் முல்லை
சாலுநிலமைந்தெனவேசாற்று. கரு
வல்லீறு டாந்தை மயில் கோழி காக்கை
எல்லாரும்பட்சியைந்தேயென்னலாஞ்—சொல்லு
ம் (மிவை
மெய் வாய் கண் மூக்கு மிளிர் செவி யோடைந்து
பொய்யில்பொறியென்றேபுகல். கசு
சுவை யொளி யூ றோசை நாற்றமென்றோதும்
இவையைம்புலஞ்ஞியம்பு—நவையில்லா
யாகமைந்தே பிரமந் தெய்வமே பூதம்
ஆகும் பிதிர் மானுடம். உ௦
வரைவு தொழில் வித்தை வாணிகமே சிற்பம்
உரை யுழவுமாந்தர்க்குறுதொழிலாம்-வைரவமும்
மாவிரதங் காளாமுகஞ் சைவம் பாசுபதம்
வாமஞ்சமயமாறும். உக
காமங் குரோத மூலோப மத மோகம்
ஆமென்னுமார்ச்சரியமாறுகு—மாபகையாம்
கார் கூதிர் முன் பின் பனி யோ டிளவேனில்
ஆர்வேனிலாங்காலமாறு. உஉ
தேவர் விலங்கு மக்கள் செந்து மரம் புண் ணீரில்
மேவுவனவேழுபிறப்பாந்—தாவில்
குர றுத்தங் கைக்கிளை தாரம் விளரி இளி
மருவுமுழையிசையேழாம். உ௩
பால் தயிர் நெய் தேன் கருப்பஞ்சாறு நன்னீருப்பு
மேலாங்கடலேழு மேவிரதந்-தோ லெலும்பு
சுக்கில மூலந் தசை யிரத்தஞ் சொல்தாது
மிக்கதோரேழாய்விதி. உச

கைத்தொழிலைந்தாவன—எண்ணல், எழுதல், இலைகிள்ளல், பூத்தொடுத்தல், வீணைவாசித்தல்.

ஐந்திணையாவன—பாலை, குறிஞ்சி, மருதம், நெய்தல், முல்லை.

பஞ்சபட்சியாவன—வல்லூறு, ஆந்தை, மயில், கோழி, காக்கை.

ஐம்பொறியாவன—மெய், வாய், கண், மூக்கு, செவி.

ஐம்புலனாவன—சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம்.

ஐந்தியாகமாவன—பிரமம், தெய்வம், பூதம், பிதிர், மானுடம்.

அறுதொழிலாவன—வரைவு, தொழில், வித்தை, வாணிகம், சிற்பம், உழவு.

அறுசமயமாவன—வைரவம், மாவிரதம், காளாமுகம், சைவம், பாசுபதம், வாமம்.

அறுபகையாவன—காமம், குரோதம், உலோபம், மதம், மோகம், மார்ச்சரியம்.

அறுகாலமாவன—கார், கூதிர், முன்பனி, பின்பனி, இளவேனில், முதுவேனில்.

எழுபிறப்பாவன—தேவர், விலங்கு, மக்கள், செந்து, மரம், புள், நீர்வாழ்வன.

எழிசையாவன—குரல், துத்தம், கைக்கிளை, தாரம், விளரி, இளி, உழை.

எழுகடலாவன—பால், தயிர், நெய், தேன், கருப்பஞ்சாறு, நன்னீர், உப்பு.

எழுதாதாவன—இரத்தம், தோல், எலும்பு, சுக்கிலம், மூளை, தசை, இரத்தம்.

பேதை பெதும்பை பெருமங்கை மாமடந்தை
மீதாமரிவை தெரிவையே-யோதுகின்ற
பேரிளம்பெண் ணேழாய்ப் பெறுபருவம் பெண்ணுக்கே
யோராவிசைத்தார் உவந்து. ௨௭

உற்றதொரு ஞாயிறு திங்கள் செவ்வா யோதுகின்ற
வெற்றிபெறு புதனே வியாழமாஞ்-சொற்பெரிய
வெள்ளி சனி யெழ்வாரமென்றே விதித்தனரால்
ஒள்ளியமுதுரையாரோர்ந்து. ௨௮

இயம நியமமே யாதனத்தினோடு
செயல்சேர் பிராணயாமஞ் சேர்ந்து—பயிலும்
பிரத்தியாகாரந் தியானந் தாரணை நேர் சமாதி
விரித்தங்கயோகமெட்டாய்வேண்டு. ௨௯

வாசுகியினோடு வளரனந்தன் றக்கனே
ஏசில்சங்கபாலன் குளிகனும்—பேசுகின்ற
பதுமன் மகாபதுமன் கார்க்கோடகனும்
விதியட்டநாகம் விளம்பு. ௩0

இந்திர னங்கி யம னிருதி யேர்வருணன்
முந்தியவாயு முதற்றனத—னிந்து சடை
யீசான னிங்கிவர்தா மட்டதிக்குப்பாலகரேன்
றுசறுதோன்னூலுரைக்குமாய்ந்து. ௩௧

சிங்காரம் வீரியமுஞ் சேரும் பெருநகையும்
இங்கார் கருணை யிரௌத்திரமே-பொங்குகுற்சை
சாந்தமோ டற்புதமும் தங்குபயந் தன்னோடு
சேர்ந்த விரத மோன்பான் செப்பு. ௩௨

ஆதித்தன் சோம னங்காரகன் புதனே
போதஞ் செறி பொன்னவனுடனே—வாதுற்ற
வெள்ளி சனி கேது மேவு மிராகுமிவை
தேள்ளு நவக் கோளெனவே செப்பு. ௩௩

பெண்பருவமேழாவன—பேதை, பெதும்பை, மங்கை, மடந்தை, அரிவை, தெரிவை, பேரிளம்பெண்.

எழுவாரமாவன—ஞாயிறு, திங்கள், செவ்வாய், புதன், வியாழம், வெள்ளி, சனி.

அட்டாங்கயோகமாவன—இயமம், நியமம், ஆதனம், பிராணாயாமம், பிரத்தியாகாரம், தியானம், தாரணை, சமாதி.

அட்டநாகமாவன—வாசுகி, அனந்தன், தக்கன், சங்கபாலன், குளிகன், பதுமன், மகாபதுமன், கார்க்கோடகன்.

அட்டதிக்குப்பாலகராவார்—இந்திரன், அங்கி, (அக்கினி) யமன், நிருதி. வருணன், வாயு, தனதன், (குபேரன்) ஈசானன்.

நவரதமாவன—சிங்காரம், வீரியம், பெருநகை, கருணை, இரௌத்திரம், குற்சை, சாந்தம், அற்புதம், பயம்.

நவக்கோளாவன—ஆதித்தன், சோமன், (சந்திரன்) அங்காரகன், (செவ்வாய்) புதன், பொன்னவன், வெள்ளி, சனி, கேது, இராகு.

அரிதாள மோ டருமதாளஞ் சமதாளம்
பரி சயதாளம் விடதாளந்—துருவமுடன்
சித்திரதாளம் படிமதாள நிவிர்தமிவை
வைத்தநவதாள வழக்கு. ரூசு

மலை யாறு நா டூர் மாலை பரி கரியே
உலையா முரசு கொடியோண் செங்கோல்—நிலை
யான
அங்க மொரு பத்தா யருளினர் மேலோர்கள்
பங்கமின்றி நேரே பகர்ந்து. ரூரு

பொய்யினுடன் கோள் கோபம் போகாப் பயனி
லசொல்
மையார்களவாடல் வறியதொழில்—செய் கொ
லையே
ஓதுகொலை நினைக்கையுறுங் காமப் பற்றுசை
தீதாங் குணம் பத்துந் தேர். ரூசா

பிராண னபானன் பிறங்கு சமானன் றுகன்
விராவு வியானன்கூர்ம னுதானனும்-பராவியதோர்
கிருதரன் தேவதத்தன் கேடில் தனஞ்செயன்
ஒருபத்து வாயுவென வோது. ரூஎ

நாவல் கடு நெல்லி தான்றியோ டா லரசு
மேவு மத்தி யித்தியுடன் மாந்தளிரும்-பூவுடைய
முத்தக்காசோடு முறையான பத்துமே
வைத்த துவரென்றே மதி. ரூஅ

மேட மிடபம் மிதுன மேலாகுங் கர்க்கடகம்
பாடரி கன்னி துலாம் பாய் தேளே—நீடுமொரு
வின் மகரங் கும்பம் மிளிர் மீனம் பன்னிரண்டும்
பன்னுமிராசி யென்னும்பார். ரூகூ

நவதாளமாவன—அரிதாளம், அருமதாளம், சமதாளம், சயிதாளம், விடதாளம், துருவதாளம், சித்திரதாளம், படிமதாளம், நிவிர்ததாளம்.

பத்தங்கமாவான—மலை, ஆறு, நாடு, ஊர், மாலை, பரி, கரி, முரசு, கொடி, செங்கோல்.

பத்துத்தீக்குணமாவன—பொய், கோள், கோபம், பயனிலசொல், களவாடல், வறியதொழில், கொலை, கொலைநினைக்கை, காமப்பற்று, ஆசை.

பத்துவாயுவாவன—பிராணன், அபானன், சமானன், நாகன், வியானன், கூர்மன், உதானன், கிருதரன், தேவதத்தன், தனஞ்செயன்.

பத்துத்துவராவன—நாவல், கடு, (கடுக்காய்) நெல்லி, (காய்) தான்றிக்காய், ஆல், அரசு, அத்தி, இத்தி, மாந்தளிர், முத்தக்காசு.

பன்னிரண்டிராசியாவன—மேடம், இடபம், மிதுனம், கர்க்கடகம், அரி, (சிங்கம்) கன்னி, துலாம், தேள், (விருச்சிகம்) வில், (தனு) மகரம், கும்பம், மீனம்.

மறைநான்கோ டாறங்க மீமாஞ்சை மற்றும்
உறுதருக்கமோடு புராண—மறைநீதி
நூலிங்கிவைக ணுவலீரேழ்விஞ்சையென
மேலோருரைத்தார் வியந்து. சும

மச்சியங் கூர்மம் வராகமுடன் வாமனம்
மெச்சுபிர்மம் வைணவம் பாகவத—மிச்சைபெறு
சைவ மிலிங்கம் பௌடிகமே தாழ்வில்லாச்
செவ்வையுறு நாரதீயஞ் செப்பு. சக

காருடமே பிரமீ கைவர்த்தங் காந்தம்
பேருருமார்க்கண்டம் பேசுமே-யேரும்
ஆக்கினேயம் பிரமாண்டம் பதுமமிவை
ஆக்குபதினெண்புராணமாம். சஉ

அமரரே சித்த ரசுரர் தைத்தியர்
சமரார் கருடரே கின்னர—ரமைவுபெரு
கிருதருடன் கிம்புருடர் காந்தருவ ரியக்கர்
விருதுபெறு விஞ்சையரும் மேல். சங

பூதர் பைசாச ரந்தரர் மாமுனிவர்
ஓதுரக ராகாய ரோண்போக—பூதலத்தோர்
என்னுமிவை யீரோன்பா னெய்ந்தகணமதென
நன்னீர்செறியுலகினுட்டு. சச

அங்க மருணங் கலிங்கம் கௌசிகம்
பொங்குகாம்போசமுடன் பூவாருங்—கொங்கணமே
கோசலஞ் சாவகம் சிங்களமுஞ் சிந்துவுடன்
பேசுகின்ற சீனம்பிற. சரு

பதினான்குவிஞ்ஞையாவன—நாலுவேதம், ஆறுஅங்கம், மீமாஞ்சை, தருக்கம், புராணம், நீதிநூல்.

பதினெண்புராணமாவன—மச்சியம், கூர்மம், வராகம், வாமனம், பிரமம், வைணவம், பாகவதம், சைவம், இலிங்கம், பௌடிகம்,நாரதீயம் காருடம், பிரமகைவர்த்தம், காந்தம், மார்க்கண்டம், ஆக்கினேயம், பிரமாண்டம், பதுமம்.

பதினெண்கணமாவன—அமரர், சித்தர், அசுரர், தைத்தியர்,கருடர், கிருதர், கிம்புருடர், காந்தருவர், இயக்கர், விஞ்சையர். பூதர், பைசாசர், அந்தரர், முனிவர்,உரகர், ஆகாயர், போகபூமியர்.

பதினெண்பாடைகளாவன—அங்கம், அருணம், கலிங்கம், கௌசிகம், காம்போசம், கொங்கணம், கோசலம், சாவகம், சிங்களம், சிந்து, சீனம்.

சோனகஞ் செல்வங் துன்றுதிராவிடம்
மான துளுவமுடன் மாமகதம்-ஆனதொரு
பப்பரம் வங்க மராடம் பதினெட்டாய்ச்
செப்பியதோர் பாடையெனத் தேர். சகூ

அச்சுவினி பரணி யார லுரோகணியோ [லாப்
டிச்சை பெறு மான்றலையே யீசனுள் கொச்சையி
பிண்டியுடன் வண்டு பெருமரவினுண் மாசி
கொண்ட வெலி யுத்திரமாய்க்கோள். சஎ

அத்தம் பயறு மருடபமே முறமுஞ்
சித்தமுறு பனையே கேட்டை சிலை-பத்திபெறு
பூராட மாஷீ பொருவோணம் புட் சதையஞ்
சேர் பூரட்டாதியின்னுங் தேர். சஅ

உத்திரட்டாதியுடன் கடையாம் ரேபதி
மேத்தியமூவொன்பான் விண்மீனும்--இத்தரை
யில்
உரிச்சொனிகண்டி னுறுந்தொகுதி பன்னிரண்டும்
தெரித்துணர்வார் தேசிகராவார். சகூ

பன்னிரண்டாவது முற்றிற்று.

ஆகத்தொகுதி பன்னிரண்டிற்குங்கூடியவெண்பா, ௲௱ய.

சோனகம், திராவிடம், துளுவம், மகதம், பப்பரம், [illegible]ங்கம், மராடம்.

இருபத்தேழுநட்சத்திரங்களாவன—அச்சுவினி, (அசுபதி) பரணி, ஆரல், (கார்த்திகை) உரோகணி, மான்றலை, (மிருகசீரிடம்) ஈசனுள், (திருவாதிரை) பிண்டி, (புநர்பூசம்) வண்டு, (பூசம்) அரவினுள், (ஆயிலியம்) மாசி, (மகம்) எலி, (பூரம்) உத்திரம்.

அத்தம், பயறு, (சித்திரை)தீபம், (சோதி) முறம், (விசாகம்) பனை, (அனுஷம்) கேட்டை, சிலை, (மூலம்) பூராடம், ஆடி, (உத்திராடம்) திருவோணம், புள், (அவிட்டம்) சதையம், பூரட்டாதி,

உத்திரட்டாதி, இரேபதி.

முற்றிற்று.

